1492

# Tolstoy's Two Pilgrims

IN TAMIL

BY

K. VISVANATHA AIYAR, B.A., L.T.
*Asst, Govt. Training School, Chittoor*




1926
...N PUBLISHING HOUSE LTD.
MADRAS

0142, MTA, T
N26
59491

# டால்ஸ்டாயின்
# இரண்டு யாத்திரைக்காரர்கள்

3280
8y4 8113

இது

சித்தூர் கவர்ன்மெண்ட் ட்ரெயினிங் ஸ்கூல்
உபாத்தியாயராகிய
கே. விசுவநாதய்யர், பி.ஏ., எல்.டி.

அவர்களால் எழுதப்பெற்றது


OFFICE OF THE REGISTRAR OF BOOKS
No.
18 MAR 1927

1926

இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட்
சென்னை

விலை அணா 5]

[காபிரைட்

# இரண்டு யாத்திரைக்காரர்கள்

## அத்தியாயம் 1

முன்னொருகாலத்தில் இரண்டு கிழவர்கள் கடவுளை ஆராதிக்கும் பொருட்டுக் கிறிஸ்தவ புண்ணிய ஸ்தலமாகிய ஜெரூஸலம் என்னும் திவ்விய ஸ்தலத்திற்கு யாத்திரை செய்ய வேண்டுமென்று உத்தேசித்தார்கள். அவர்களில் ஒருவர் **ஈபிம்** என்னும் நாமம் வாய்ந்தவர். அவர் மிகுந்த தன வந்தரான குடியானவர். மற்றொருவர் எலீஷா என்னும் பெயர் வகித்த சாமானிய ஸ்திதிவந்தர்.

அவர்களில் ஈபிம் என்றவரைக் கண்டிப்புள்ள மனிதரென்றும் ஒழுங்கான நடவடிக்கை யுள்ளவரென்றும் கௌரவமுள்ள கனவானென்றும் ஜனங்கள் மதித்து வந்தனர். அவர் சாராயம் குடியார்; சுருட்டுப் பிடியார்; பொடிபோடார்; அநாகரீகமான பாஷையை ஒருபொழுதும் உபயோகப்படுத்தார். அவர் இரண்டு தடவைகளில் கிராமத் தலைவராகப் பிரஜைகளால் அங்கீகரிக்கப்பட்டு, அத்தொழிலைத் திறமையுடன் நடத்திவந்தனர். அவர் உத்தியோகஞ் செய்து வந்தகாலத்தில் சிறிதும் கடன் வாங்காது தமது குடும்பத்தை நிர்வகித்தனர். அவர் ஒரு பெரிய குடும்பி. இரண்டு குமாரர்களும், மணம் புரிந்துள்ள ஒரு பேரனும் அவருக்கு இருந்தார்கள். அவர் குடும்பத்தினர் எல்லோரும் அவருடன் வசித்து வந்தார்கள். அவர் தேக சௌக்கியமும் திடமும் வாய்ந்தவர். அவருக்கு நீண்ட தாடி உண்டு; அவருக்குச் சுமார் எழுபது வயதிருக்கலாம். ஆயினும், அவர் சரீரம் சிறிதும் வளையாமல் நிமிர்ந்த வண்ணமாகவே யிருந்தது. அவர் தாடியில் ஆங்காங்கு இரண்டொரு மயிர்களே நரைத்திருந்தன.

எலீஷா என்பவரும் கிழவரே. அவர் தனவந்தரு மல்லர்; ஏழையுமல்லர். பூர்வத்தில் அவர் தச்சுவேலை செய்து பிழைத்து வந்தார்; அவருக்குக் கிழத்தனம் மேலிடவே, அவர் தேனீக்களைக் காத்துத் தமது வீட்டிலேயே வசித்துவந்தார். அவருடைய குமாரர்களில் ஒருவன், வெளியே தொழில் செய்து பிழைத்து வந்தனன். மற்றொருவன் தன் தகப்பனுருடனே வசித்திருந்தான். எலீஷா என்பவர் இரக்கமும் உற்சாகமும் வாய்ந்த மனமுடைய கிழவர். அவருக்குப் பொடியிலும், பிராந்தியிலும் விருப்பம் அதிகம். பாடல்கள் இனிமையாய்ப் பாடுவதிலும் அவர் அதிக இஷ்டமுள்ளவர். ஆயினும், அவர் மிகவும் சாந்தமுள்ளவர். அவர் ஒருவருக்கும் ஒருவிதத் தீங்கும் செய்யமாட்டார். அவர் தமது குடும்பத்தினரோடும் அயலாரோடும் மிகவும் நட்புடன் பழகி வந்தனர். அவர் மிகவும் குள்ளமானவர். அவர் தாடிமயிர் சுருட்டை சுருட்டையாய் இருந்தது. எலீஷா என்கிற தீர்க்க தரிசியின் தலையைப் போல், அவர் தலை வழுக்கைத் தலையாயும், பளபள வென்று பிரகாசித்துக் கொண்டு மிருந்தது.

வெகு நாட்களுக்கு முன்னரே இவ்விருவரும் ஒன்று சேர்ந்து, தாம் ஜெரூஸலத்திற்குப் போவதாகத் தீர்மானம் செய்து கொண்டனர். ஆனால் ஈபிமுக்கு ஒழிவேயில்லை. அவருக்கு ஏதாவது ஒரு வேலை இருந்து கொண்டேயிருந்தது. அவர் ஒன்றை முடித்ததும், மற்றொன்றைத் தொடங்குவார். முதலில் அவர் பேரனுக்குக் கலியாணமாக வேண்டியிருந்தது. பிறகு அவர் குமாரன் ஒருவன் சேனையினின்று வீட்டிற்குத் திரும்பிவந்து புதிய குடிசையொன்றைக் கட்டவாரம்பித்தான்.

ஓர் உற்சவநாளில் இவ்விரு கிழவர்களும் சந்தித்து, மரத்துண்டுகளின் மேல் உட்கார்ந்து கொண்டு பேசவாரம்பித்தனர்.

"நல்லது! வீண்பேச்சுப் போதும்! நம்முடைய தீர்மானத்தை நிறைவேற்றும் பொருட்டு, பிரயாணத்திற்கு எப்பொழுது புறப்படுவது?" என்று எலீஷா கேட்டார்.

ஈபிம் தமது புருவத்தை நெரித்துக் கொண்டு "நான் இன்னும் தாமதிக்க வேண்டும்; இந்த வருஷம் எனக்கு மிகவும் கஷ்டமாக விருக்கிறது. நான் என் குடிசையை ஆரம்பிக்கையில் நூறு ரூபிள்கள் (நூற்றைம்பது ரூபாய்) போது மென்று எண்ணி அந்த வேலையைத் துவக்கி விட்டேன். இதுகாறும், முந்நூறு ரூபிள்கள் செலவாய் விட்டன. இன்னும் அக்குடிசை முடிவு பெறவில்லை. அடுத்த கோடைக்காலம் வரையில் நாம் தாம்தித்துக் கடவுள் சித்தமிருக்கும் பக்ஷத்தில், பின்பு நாம் தடையின்றிப் புறப்படுவோம்," என்றனர்.

"நாம் இனித் தாமதிக்கக் கூடாது; இப்பொழுதே புறப்படவேண்டும். வஸந்த காலமே யாத்திரைக்குரிய காலம்," என்று எலீஷா பகர்ந்தனர்.

"காலமா? வஸந்த காலந்தான் தக்க காலமென்று நானும் ஒப்புக் கொள்ளுகிறேன். நான் குடிசை வேலையைத் துவக்கி விட்டேன். அதை இப்பொழுது இம்மட்டில் எங்ஙனம் நிறுத்தி விடுகிறது?"

"வீட்டில் உம்மைத் தவிர வேறொருவரு மில்லையா? உம்முடைய குமாரன் பார்த்துக் கொள்ளட்டுமே."

"சரி! சரி!! என் குமாரனா? அவன் எப்படிப் பார்த்துக் கொள்ளுவானென்பது எனக்கு நன்றாகத் தெரியும். அவனை நம்பவே கூடாது. அவன் ஒரு குடிக்காரன்."

"அப்படியா! நல்லது! ஆனால், நாமிறந்த பிறகு நாமில்லாமல், அவர்கள் எங்ஙனம் நடந்து கொள்ளப் போகிறார்கள்? இப்பொழுதே உம்முடைய குமாரன் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வாரம்பிக்கட்டும்."

"அது சரிதான். ஆயினும், ஒவ்வொரு காரியத்திலும்

என் கண் பார்வையைச் செலுத்தி, அதைச் சரிவர முடிவுக்குக் கொண்டு வந்தால்தான் எனக்குத் திருப்தி உண்டாகும்.''

"நல்லது! நண்பரே! உம்மால் ஒவ்வொன்றையும் முடிக்க வியலாது. ஒரு தினம் எங்கள் வீட்டிலுள்ள ஸ்திரீகள், விடுமுறைக்காக ஒவ்வொன்றையும் சுறண்டிச் சுத்தஞ் செய்து கொண்டிருந்தார்கள். கடைசியில் நன்ருகப் பார்க்கையில், ஏதோ பாக்கி யிருந்து கொண்டே யிருந்தது. ஆனால், என் மூத்த குமாரன் மனைவி புத்தி கூர்மையுள்ளவள். அவள் 'விடு முறை நாள் தாமதிக்காமல் செல்லுகின்றதால் நாம் பிழைத்தோமா! நாம் உயிரைக் கொடுத்துக் கொண்டு எவ்வளவு வேலை செய்தபோதிலும், பாக்கி ஏதாவது இருந்து கொண்டேயிருக்கும்' என்றனள்,'' என்ருர்.

"இக்குடிசையின் மீது வேண்டிய பணம் செலவழித்து விட்டேன். வெறுங்கையோடு நான் எங்ஙனம் புறப்படுகிறது? குறைந்தது நூறு ரூபிள்கள் தேவை. அது சிறிய தொகையல்ல. நான் அதை எளிதில் சேகரிக்க முடியாது,'' என்ருர் ஈபிம்.

இதைக் கேட்டதும் எலீஷா நகைத்து, "நண்பரே! ஏன் வீணில் பாவம் சம்பாதிக்கிறீர்? என்னைவிட உம்மிடத்தில் பதின் மடங்கு தனம் அதிகம் இருக்கின்றது, அங்ஙனமிருந்தும் நீர் கையிற் பணமில்லை யென்று சொல்லுகிறீர். 'நீர் எப்பொழுது புறப்பட விரும்புகிறீர்' என்பதை மாத்திரம் எனக்குச் சொல்லும். என் கையில் பணமில்லாவிடினும், நான் அதைச் சேகரித்துக்கொண்டு புறப்படுகிறேன்.'' என்ருர்.

ஈபிம் புன்னகைசெய்து, "நீர் இவ்வளவு பணக்காரரென்று எனக்குத் தெரியவே தெரியாது! நீர் எங்ஙனம் பணம் சேகரிக்கப் போகிறீர்?'' எனக் கேட்டனர்.

"ஓ! அதென்ன பிரமாதம்! வீட்டில் இங்குமங்கும்

தேடி ஆராய்ந்து, வேண்டியதைச் சேர்த்து விடுகிறேன். என் அயல் வீட்டுக்காரர் ஒருவர் பத்துத் தேனீக் கூடுகள் வேண்டுமென்று என்னை வெகு நாட்களாகக் கேட்டுக் கொண்டே யிருக்கிறார். அவைகளை அவரிடத்தில் குத்தகைக்கு விட்டு விடுகிறேன்."

"தேனீக்கள் நிறையவந்து அடைவைத்து அவருக்கு மிகுந்த லாபம் தரின் உமக்கு வருத்தமாக விருக்காதா?"

"வருத்தமா? எனக்கு ஒருநாளும் வருத்தமே கிடையாது! என் பாவங்கள் ஒன்றுக்குத் தான் வருத்தமே தவிர, வேறொன்றிலும் எனக்கு வருத்தமே கிடையாது. என் ஆத்மாவைவிட அருமையானது எனக்கு ஒன்றுமில்லை."

"அது சரிதான்! ஆனால், வீட்டில் ஒன்றுக்குப் பதில் வேறு ஒன்று நடந்தால், அதுவும் கெடுதல் தானே?

"ஆத்மாவுக்குக் கெடுதல் வந்தால் அது எல்லாவற்றிலும் தீமையல்லவா? நாம் முன்னமே சங்கற்பம் செய்து கொண்டிருக்கிறோம். ஆகையால், நாம் தவறாது போகவேண்டும். இனித் தாமதமின்றிப் போவோம், வாரும்," என்றனர் எலீஷா.

---

## அத்தியாயம் II

கடைசியில், எலீஷா தமது நண்பரை வழிக்குக் கொண்டு வந்து விட்டார். ஈபிம் வெகு நேரம் ஆழ்ந்து ஆலோசித்த பின்னர் மறு நாட் காலையில் எலீஷாவி னிடத்திற்கு வந்து, "நல்லது! நாம் போவோம். நீர் பேசுவது உண்மையே; நம் வாழ்க்கைக்கும் மரணத்திற்கும் கடவுளே எஜமானர். நமக்கு உயிரும் திடமும் இருக்கும் பொழுதே நாம் போகவேண்டியது தான்," என மொழிந்தனர்.

ஒரு வாரத்திற்குள் இரண்டு கிழவர்களும், பிரயாணத்திற்கு வேண்டியவைகளைத் தயார் செய்து கொண்டார்கள்.

ஈபிம் நூறு ரூபிள்களைத் தமக்காக எடுத்துக்கொண்டு, இருநூறு ரூபிள்களை வயது சென்ற தமது மனைவியினிடம் கொடுத்தார்.

எலீஷாவும் தயாராய் விட்டார். அவர் தமது அயல் வீட்டுக்காரரிடம் பத்துத் தேன்கூடுகளை ஈக்களுடனே விற்று, எழுபது ரூபிள்கள் பெற்றுக் கொண்டார். இன்னும் முப்பது ரூபிள்களைத் தமது குடும்பத்தினரிடத்தினின்று சேகரித்துக் கொண்டார். அவருடைய கிழமனைவி தான் இறந்தால், தனது கிரியைகளுக்கு வேண்டுமென்று சில ரூபிள்களை வைத்துக் கொண்டிருந்தாள். அவள் அவைகளையும் அவரிடம் கொடுத்து விட்டாள்; அவர் மருமகளும் தன்கையிலிருந்தவைகளை யெல்லாம் அவரிடத்தில் அன்புடன் அளித்தாள்.

ஈபிம் என்பவர் தமது குமாரனுக்கு வைக்கோலுக்காகக் குத்தகைக்கு இவ்வளவு வயல்களை விடவேண்டு மென்றும் குடிசைக்குக் கூரை வேய்ந்து அதைஎங்ஙனம் பூர்த்தி செய்ய வேண்டுமென்றும், மற்றும் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் சிறிதளவும் விடாது ஆலோசித்து அவைகளை நடத்தும் முறைகளையும், இன்னும் பல புத்திமதிகளையும் கூறினர்.

எலீஷா என்பவர் தமது மனைவி, குமாரன், மருமகள் முதலியவர்களிடத்தில் அயல் வீட்டுக்காரரிடம் பேசிய வண்ணம் தேன்கூடுகளைப் பருவகாலத்தில் அவரிடம் ஒழுங்காக ஒப்புவித்து விடுங்கள் என்றும், எவ்வெவை செய்ய வேண்டுமோ அவ்வவைகளை நீங்களே நன்றாக ஆலோசித்துச் சமயோசிதம் போல் செய்து கொள்ளுங்கள் என்றும் இனி நீங்களே உங்கள் காரியங்களுக்கு எஜமானர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள் என்றும் சொன்னரே யொழிய, வீட்டு விஷயங்களைப் பற்றி வேறொன்றும் பேசவில்லை. கடைசியாக எல்லாம் தயாராயின பின், அந்தக் கிழவர்கள் இருவரும் புறப்பட்டார்கள். அவர்கள் உறவினர்களும்

நண்பர்களும் கிராமத்தின் எல்லைவரையிலும் அவர்களைப் பின் தொடர்ந்து சென்று பின்பு தமது வீடு திரும்பினர்.

எலீஷா உற்சாக மனத்துடன் பிரயாணஞ் செய்தார்; கிராமத்தைத் தாண்டியதும், வீட்டுக் கவலைகள் யாவற்றையும் அவர் மறந்தார். அவருடைய காரியங்களெல்லாம் தமது நண்பரைச் சந்தோஷிப்பிப்பதும், எதிர்ப்படும் மனிதர்களுடன் வன்சொல் மொழியாது அன்புடன் பேசுவதுமேயாம். அவர் போகும்போது ஸ்தோத்திரங்களை யுச்சரிப்பார். அன்றியும் அவர் தமக்குத் தெரிந்த ஞானிகள், ஜீவன் முக்தர்கள் முதலியவர்களுடைய சரித்திரங்களை விஸ்தரிப்பார். அவர் வழியில் மனிதர்களைச் சந்திக்கும் பொழுதும், இரவில் தங்கும் இடங்களிலும் யாருக்காவது ஒரு நன்மை செய்வதிலும் எல்லோரிடத்திலும் இனிய மொழிகள் பேசுவதிலுமே மிகவும் கருத்தாக இருப்பார். ஆயினும் ஒன்றை மாத்திரம் அவர் விடவில்லை. அவர் பொடி போடுவதை விட்டு விட வேண்டுமென்ற எண்ணத்தால் தமது பொடி டப்பியை, வீட்டிலேயே வைத்து விட்டு வந்தனர். ஆயினும், அவர் வழியில் மிகவும் அவஸ்தைப்பட்டு, தமக்கு எதிர்ப்படும் அன்னியர்களைக் கேட்டுச் சிறிது பொடி பெற்றுக்கொள்வர். தமது நண்பர் ஈபிமையும் இத்தூர் வழக்கத்திற்கு உட்படுத்தக் கூடாதென்னும் கருத்தால், அப்பொழுதைக்கப்பொழுது அவர் வழியில் பின் தங்குவார்.

ஈபிம் என்பவரும் நன்ருகப் பிரயாணஞ் செய்தார். ஆனல், அவர் நிதானமாக நடந்தார்; அதிகமாகப் பேசவில்லை; பிறர்க்குத் தீமை யொன்றுஞ் செய்யவில்லை. ஆயினும், அவர் மனம் திருப்தி அடையாமல் கவலையில் மூழ்கி யிருந்தது. அவர் வீட்டைப்பற்றி நினைத்த வண்ணமாகவே, " ஓ அந்த விஷயத்தைப் பற்றி என் குமாரனுக்கு விவரமாகச் சொல்லவில்லையே? அவன் காரியங்களைச் சரியாகச் செய்வானு? நான் சொல்லிய வண்ணமே செய்து

முடிப்பானே?" எனப் பலவாருக ஆலோசித்துக் கொண்டே இருந்தார்.

---

## அத்தியாயம் III

இவ்வாறு ஐந்து வாரங்கள் சென்றபின் அவ்விருவர்களுடைய பழைய பூட்ஸுகள் கிழிந்து போய்விட்டன. அதனல் அவர்கள் புதியவைகளை வாங்கவேண்டியிருந்தது. கடைசியில் அவர்களிருவரும் ஒரு பட்டணத்தை யடைந்தனர். இதுவரை பிரயாணஞ் செய்ததால் அவர்கள் தமது ஆகாரத்திற்கும் இரவில் ஆங்காங்குத் தங்குவதற்கும் பணம் கொடுக்க நேர்ந்தது. ஆனல், இப்பொழுது அவர்கள் தங்கின நகரத்திலுள்ள மனிதர்கள் எல்லோரும் அவர்களைப் பிரியத்துடன் உபசரித்தார்கள். அவர்கள் தங்குவதற்கு இலவசமாய் இடம் கொடுத்தனர்; புசிக்க உணவளித்தனர்; அவர்கள் இனிமேல் செய்யவேண்டிய பிரயாணத்திற்கும், அவர்கள் மூட்டைகளில் ரொட்டிகளையும், தின்பண்டங்களையும் வேண்டியவளவு புகுத்தினர். அவர்கள் அந்த உணவுப் பொருள்களின் விலையைக் கொடுக்கப் போனர்கள். ஆனல் அங்குள்ளவர்கள் அதை ஏற்றுக் கொள்ளாது மறுத்தனர். இங்ஙனம் அவர்கள் ஒரு செலவுமின்றிச் சுமார் ஐந்நூறு மைல் தூரம் பிரயாணஞ் செய்து பின்பு பஞ்சம் பரவியிருந்த மற்ருெரு ராஜ்ஜியத்திற்குள் சென்றனர்.

அங்கிருந்த மனிதர்களும் இரவில் தங்குவதற்குப் பணம் பெருமலே அவர்களுக்கு இடங்கொடுத்தார்கள். ஆயினும், அவர்களுக்கு அங்கே ஆகாரம் சிறிதும் கிடைக்கவில்லை. சில விடங்களில் பணம் கொடுத்தாலும் உணவு கிடைப்பது கஷ்டமாக இருந்தது. அதைப்பற்றி அவர்கள் விசாரித்த போது சென்ற ஆண்டில் விளைச்சல் முழுவதும் அற்றுப் போய்விட்டது என்று ஜனங்கள் முறையிட்டனர். தன

வந்த மிராசுதாரர்கள் தங்களிடத்திலிருந்த தானியங்களெல்லாவற்றையும் விற்றதனால், அடியோடு அழிந்தனர். சாமானிய ஸ்திதி வந்தர்கள் பஞ்சத்தின் கொடுமைக்கு முழுவதும் உள்ளாயினர். ஏழைகள் இருக்குமிடம் தெரியாது போயினர். சிலர் பிச்சை யெடுக்கத் தலைப்பட்டனர். வேறிடம் போகாது அங்கேயே தங்கியிருந்த சிறுபான்மையோர் தவிட்டையும், மரப்பட்டையையும் தின்று காலங் கழித்தனர்.

அவ்விருவரும் ஒரு கிராமத்தில் ஓரிரவு தங்கிய பின்னர், பதினைந்து பவுண்டு ரொட்டியை வாங்கிக்கொண்டு வெயில் உடலில் உறைக்கு முன் வெகுதூரம் போகவேண்டுமென்று உத்தேசித்து, அதிகாலையிலேயே பிரயாணஞ் செய்யப் புறப்பட்டனர். அவர்கள் சுமார் ஏழு மைல் தூரம் சென்றதும், ஒரு சிற்றருவி எதிர்ப்பட அங்கே இளைப்பாறும் பொருட்டுத் தங்கித் தமது கோப்பைகள் நிறையத் தண்ணீர் முகந்து, ரொட்டித்துண்டுகளை அந்த நீரில் தோய்த்து உண்டனர். பிறகு அவர்கள் அங்கேயே சிறிது நேரம் இளைப்பாறினர். எலீஷா தன் பொடி டப்பியை எடுத்தார்.

ஈபிம் அவரை நோக்கித் தலையை அசைத்து, “இத்துர்வாடிக்கையை நீர் ஏன் விலக்காதிருக்கிறீர்?” என வினவினர்.

எலீஷா, “நான் என் செய்வது? இப்பாவம் என்னை மிஞ்சி விட்டது.” எனத் தமது கையை அசைத்துத் தம்மால் இதை ஒழிக்க இயலவில்லை எனத் தெரிவித்தனர்.

அவர்கள் மறுபடியும் புறப்பட்டுச் சென்றனர். சுமார் ஏழுமைல் தூரம் நடந்ததும், ஒரு பெரிய கிராமம் எதிரில் குறுக்கிட்டது. அப்பொழுது வெயிலின் கடுமையைத் தாங்க முடியவில்லை. எலீஷா மிகவும் களைத்து விட்டார். அவர் சிறிது நேரம் அங்கே தங்கி, தாகந் தீர்த்துக் கொள்ள

விரும்பினர். ஆனல், ஈபிம் நிற்காது நடந்து கொண்டே யிருந்தார். அவர் எலீஷாவைக் காட்டிலும் திடத்துடன் நடக்கும் சக்தியுற்றவர்.

"எனக்கு மிகவும் தாகமாக விருக்கிறது," என்றார் எலீஷா.

"நல்லது! நீர் போய்த் தண்ணீர் குடித்து வாரும்; எனக்குத் தாகம் உண்டாகவில்லை," என்றார் ஈபிம்.

"சரி! நீர் எனக்காக ஏன் நிற்கவேண்டும்? நீர் நடந்து கொண்டே இரும்! நான் இந்தக் குடிசைக்குட் சென்று தண்ணீர் குடித்து ஒரு நிமிஷத்தில் உம்மைப் பிடித்து விடுகிறேன், போம்," என்றார் எலீஷா.

"சரி" என்று சொல்லி, ஈபிம் தமது வழியே சென்றார்; எலீஷாவும் குடிசையை நோக்கித் திரும்பினர்.

அது மண் சுவர்களால் அமைக்கப் பட்ட ஒரு சிறு குடிசை. சுவர்களின் கீழ்ப்பாகம் கறுப்பு வர்ணம் பூசப்பட்டும், மேல் பாகம் சுண்ணும்பு பூசி வெண்ணிறமாகவும் இருந்தது. ஆனல், அச்சுவர்கள் பலவிடங்களில் இடிந்து மண் உதிர்ந்த வண்ணமாக இருந்தன. ஒரு பக்கத்தின் மேற்கூரை விழுந்து விடும் நிலைமையிலிருந்தது.

இவைகளைக் கவனிக்குமளவில், இக்குடிசை வெகு நாட்களாகப் பழுது பார்க்கப்படவில்லை என்பது தெளிவாகிறது. அவர் உள்ளே நுழைந்து முற்றத்தில் பார்க்கையில், அங்கே ஒரு மனிதன் ஒரு பெஞ்சியின் அருகில், தரையின்மீது படுத்திருந்தான். அவன் படுத்துக் கொண்டபோது அங்கே நிழலாய் இருந்திருக்கலாம். ஆனல், இப்பொழுது அவன் மீது வெயில் தீவிரமாகக் காய்ந்து கொண்டிருந்தது. ஆயினும், அவன் சிறிதும் நகரவில்லை. அவன் நன்றாய்த் தூங்குவதாகவும் காணப்படவில்லை. எலீஷா அவனைக் கூப்பிட்டுத் தனக்குத் தண்ணீர் வேண்டுமென்று சொல்லியும் அவன் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

"அவன் வியாதிஸ்தனோ? அல்லது கோபிஷ்டனோ?" என எலீஷா நினைத்து அதன் உள்ளே நுழைந்தார். உடனே ஒரு குழந்தையின் அழுகைக்குரல் அவர் செவியில் விழுந்தது. பின்பு அவர் கதவைத் தட்டி, "எஜமானர்களே!" எனக் கூவினார். பதில் ஒன்றும் கிடைக்கவில்லை. மறுபடியும் அவர் தமது தடியால் கதவைத் தட்டி, "ஓ! கிறிஸ்தவர்களே!" என்றார். அதற்கும் பேச்சுமூச்சில்லை. "ஓ! தெய்வ பக்தர்களே" யென்றார். விடையே யில்லை. பின்பு எலீஷா அவ்விடம் விட்டுப்போக எண்ணித் திரும்புகையில் யாரோ ஒருவர் உட்புறத்தில் உருமிக் கொண்டிருப்பது போல அவர் செவியில் விழுந்தது.

"ஏதோ இங்கே சம்பவித்திருக்கிறது; அது என்னவென்று தெரிந்து கொள்ளுகிறேன்" என நினைத்து, அவர் கதவின் சமீபத்தில் மறுபடியும் சென்றார்.

---

## அத்தியாயம் IV

அவர் அக்கதவைத் தள்ளிப் பார்க்கையில், அது தாழ்ப்பாள் போடப்படாமலிருந்தது. உடனே அவர் கதவைத் திறந்துகொண்டு நடையிற் சென்றார். உட்கதவு திறந்திருந்தது. அறையின் இடப்பக்கத்தில் ஓர் அடுப்பு வைக்கப்பட்டிருந்தது. மூலையில் ஓரிடத்தில் சித்திர உருவங்களும், அவைகளின் அருகில் ஒரு மேஜையும் இருந்தன. மேஜையின் பக்கத்திலுள்ள ஒரு பெஞ்சியில் ஒரு கிழவி உட்கார்ந்து கொண்டு தன்தலையை மேஜையின் மேல் சாய்த்த வண்ணமாக விருந்தாள். அவள் சரீரத்தில் "ஷர்டைத்" தவிர வேறு உடையொன்றுமில்லை. அவள் அருகாமையில் மெழுகு பொம்மை போல் உடல் வெளுத்தும், வயிறு பெருத்தும், சரீரம் மெலிந்தும் இருந்த ஒரு சிறுவன் அவள் ஷர்டைப் பிடித்து இழுத்துக்கொண்டு, விம்மி விம்மி அழுது கொண்டு, "தின்பதற்கு ஏதாவது கொடு" என்று கேட்ட

வண்ணமாக விருந்தான். எலீஷா உள்ளே நுழைந்தார். உடனே அவ்வறையில் துர்க்கந்தம் வீசினது. அடுப்பின் புறத்தில் ஒரு ஸ்திரீ ஒரு ஷெல்பின் மீது படுத்துக்கொண்டு வலிப்பால் காலே உதறிக்கொண்டும் அடிக்கடி இப்புறம் அப்புறம் புரண்டு கொண்டு மிருந்தாள். அவள் மல்லாந்து படுத்து மேலே பார்க்கவே யில்லை. அவள் தொண்டை ஒரு வித சப்தம் செய்துகொண் டிருந்தது. அவள் படுத்திருக்கும் இடத்திலிருந்தும் கொடிய துர்க்கந்தம் வீசியது. அவள் மிகுந்த வியாதியினுலும், நகரமுடியாத பலஹீனத்தினுலும் அவஸ்தைப்பட்டுக் கொண்டு கவனிப்பார் யாருமின்றி, நிராதரவான ஸ்திதியில் இருக்கிருளென்பது ஐயமறத் தெளிவாயிற்று. அந்தக் கிழவி தன். தலையை நிமிர்த்தி எலீஷாவை நோக்கி, "உனக்கு என்ன வேண்டும்? உனக்குக் கொடுக்க இங்கே ஒன்றுமில்லை," யென்ருள். எலீஷா அவள் சமீபத்தில் போய், "எனக்குக் கொஞ்சம் தண்ணீர் வேண்டும்" என்ருர்.

"தண்ணீர் கொண்டு வருவதற்கு இங்கே ஒருவருமில்லை. இங்கே ஒன்றும் கிடையாது; உன் வழியே போ" என்ருள் அவள்.

"இந்த ஸ்திரீயைக் கவனிப்பதற்கு ஒருவருமில்லையா?" என்ருர் எலீஷா.

"ஒருவரும் கிடையாது; எங்கள் மனிதன் முற்றத்தில் இறக்கும் நிலைமையிலிருக்கிருன். நாங்களும் இங்கே இறந்து கொண்டிருக்கிரேும்" என்ருள் கிழவி.

எலீஷாவைக் கண்ணுற்ற சமயத்தில் அங்கு, அழாதிருந்த சிறுவன் ஒருவன் கிழவி பேச ஆரம்பித்ததும், மறுபடியும் அவள் உடையைப் பிடித்திழுத்து, "பாட்டி! கொஞ்சம் ரொட்டி கொடு. பாட்டி! கொஞ்சம் ரொட்டி," என விம்மி விம்மி அழத் துவக்கினன்.

எலீஷா, மறுபடியும் கிழவியைக் கேள்விகள் கேட்க

யத்தனிக்கையில், முற்றத்திலிருந்த மனிதன் சுவரைப் பிடித்துக்கொண்டு பெஞ்சியின் சமீபத்திற்கு வர முயன்றான். ஆனால் அவன் தடுமாறி வாயிற்படியின் அருகில் மூலையில் விழுந்து எழுந்திருக்கவும் சக்தியற்றவனானான். அப்பொழுது அவன் பெருமூச்சு விட்டு, ஒவ்வொரு வார்த்தையாக, "நாங்கள்—எல்லோரும் வியாதி—ஆகாரங் கிடையாது—பார்!—அவன் சாகிறான்—பசியினால்" என்று அச் சிறுவனைச் சுட்டிக் காட்டிக் கண்ணீர் உகுத்து மொழிந்தனன்.

எலீஷா உடனே தமது மூட்டைகளைத் தோளிலிருந்து கீழே யிறக்கி, அவைகளில் ஒன்றைப் பெஞ்சியின் மீது வைத்து அவிழ்த்து ஒரு ரொட்டியை எடுத்துக் கத்தியினால் நறுக்கி ஒரு துண்டத்தை அம்மனிதன் கையில் கொடுக்க, அவன் தலையை அசைத்து, அதைப் பெற்றுக் கொண்டு "பையனுக்கும் கொடு" என்று சொன்னான். அவ்வாறே எலீஷா பையனுக்கும் கொடுத்தார். அச் சிறுவன் தன் இரண்டு கைகளையும் நீட்டி, விரைவில் ரொட்டியைப் பெற்றுக் கொண்டான். அப்பொழுது ஒரு சிறு பெண் அடுப்பங்கரை மூலையிலிருந்து நகர்ந்து வந்து ரொட்டியை விறைத்து விறைத்துப் பார்த்தாள். எலீஷா அவளுக்கும் ஒரு துண்டு கொடுத்தார். அதன் பின்பு இன்னொரு துண்டு நறுக்கிக் கிழவியினிடத்தில் கொடுக்க, அவள் அதைப் பெற்றுக்கொண்டு மென்று தின்ன ஆரம்பித்து, "கொஞ்சம் தண்ணீர் கொண்டு வருகிறாயா? எல்லோருடைய தொண்டையும் வறண்டு கிடக்கிறது. நான் நேற்றும் இன்றும் தண்ணீர் கொண்டுவர முயன்றேன். ஆனால் கீழே விழுந்து விட்டேன். ஒருவரும் எடுத்துப் போகாமலிருந்தால் தண்ணீர்த் தொட்டி அங்கேயே இருக்கும்," என்றனள்.

எலீஷா கிணறு இருக்குமிடத்தைக் கேட்டுக் கொண்டு

அவ்விடம் சென்று நீர்த் தொட்டி அவள் சொல்லிய இடத்தில் இருக்கக் கண்டு, அதை எடுத்துத் தண்ணீர் இழுத்து வந்து அவர்கள் எல்லோருக்கும் கொடுத்தார். அவர்கள் எல்லாரும் தண்ணீர் பருகி, மேலும் கொஞ்சம் ரொட்டியைத் தின்று மறுபடியும் தண்ணீர் அருந்தினர். ஆனால், அம்மனிதன் மாத்திரம் அவர் கொடுத்த ரொட்டியைத் தின்ன முடியாது என்று சொல்லி மறுத்துவிட்டான்.

அந்த ஸ்திரீயோ நினைவு தவறி ஷெல்பின்மீது புரண்ட வண்ணமாகப் படுத்திருந்தனள். பின்பு எலீஷா, கிராமத்திற்குள் சென்று ஆகாரம், உப்பு, மாவு, வெண்ணெய் முதலியவைகளைத் தேடிக்கொண்டு வந்தனர். பிறகு அவர் ஒரு கோடரி கொண்டுவந்து, மரத்துண்டுகளை வெட்டித் தீ மூட்டினர். அச்சிறு பெண் அவருக்கு வேண்டிய உதவி புரிந்தனள். பின்பு அவர் சிறிது குழம்பு, கஞ்சி முதலியவற்றைத் தயார் செய்து அவர்களைப் போஷித்தார்.

அங்கிருந்த மனிதன், கிழவி குழைந்தைகள் முதலிய எல்லோரும் அவற்றை உண்டனர். பிறகு அக்குழந்தைகள் ஒருவர் பக்கத்தில் ஒருவராய்ப் படுத்து நித்திரை போயினர். அப்புறம் கிழவியும் குடியானவனும் எலீஷாவுக்கு நடந்த விஷயங்களைச் சொல்லலுற்றனர்.

“ஐயா! நாங்கள் சாமானிய சொத்துள்ளவர்கள். சென்ற வருஷம் விளைச்சல் சூனியமாகப் போனதால், இலையுதிர் காலத்தில் சிறிது தானியம் சேகரித்து வைத்தோம். அவைகளைக் கொண்டு காலக்ஷேபஞ் செய்தோம். அவை எல்லாம் அற்றதும், சில நல்ல மனிதர்களை உதவி புரியும்படி வேண்டிக் கொண்டோம். ஆனால் அவர்கள் சிறிது காலம் உதவி அளித்த பின்னர், மேலும் உதவி புரிய மறுத்தனர். சிலர் எங்களுக்கு உதவிபுரிய வேண்டுமென்று விருப்பங் கொண்டிருந்த போதிலும், அவர்களிடத்தில் ஒன்றுமில்லா

திருந்தது. எங்கள் எல்லோருக்கும் பணம், மாவு, ரொட்டி முதலியவைகளைக் கடன் கொடுக்க வேண்டியிருந் தது. அதனால் எங்களுக்கு உதவிசெய்ய ஒருவரும் மனந் துணியவில்லை. பிச்சை யெடுத்துப் பிழைக்க எங்க ளுக்கு வெட்கமாக விருந்தது. பிறரிடத்தில் வேலைக்கு அமரப் பிரயத்தனம் செய்தும், வேலை கிடைக்கவில்லை. பஞ்சகாலத்தில் எல்லோரும் உணவுக்காக வேலைக்கு முய லுகின்றனர். அதனால், ஒரு நாள் வேலை அகப்பட்டால் நான்கு நாள் வேலை கிடைப்பதில்லை. பின்பு வீணில் காலங் கழிக்க மனம் ஒப்பாததினால் வேட்டையாடச் சென்றோம். கிழவியும் சிறு பெண்ணும் வெகுதூரஞ் சென்று பிச்சை யெடுக்க முயன்றார்கள்; ஒன்றும் கிடைக்கவில்லை; புதிய மாசூல் வரையில், எவ்வாறாயினும் உயிரோடிருக்கலாம் என எண்ணிப் பலவிதப் பிரயத்தினங்கள் செய்தோம். வஸந்த காலம் வந்தபிறகும், ஒருவரும் உதவி புரியவில்லை. வியா தியும் கூட வந்தது. கஷ்டதசையைச் சொல்ல முடியாது. நாங்கள் எல்லோரும் வாயு பக்ஷணம் செய்து வசித்தோ மென்றே சொல்லவேண்டும். சில நாள் புல் பூண்டுகளையும் தின்றோம். என் மனைவி வியாதிவாய்ப் பட்டாள். புல் தின் றதனாலோ, மற்றெதனாலோ அவளுக்கு விபாதி வந்தது. அவளால் நகரவும் முடியவில்லை. நானும் சக்தியற்றுப் போனேன். இனி நாங்கள் எவ்வாறு சௌக்கியப்படப் போகிறோம்? அது தெய்வத்திற்குத் தான் தெரியும்," என்று குடியானவன் மொழிந்தனன்.

அப்பொழுது கிழவி, "நான் அவர்களைப் போல அவ் வளவு ஹீனஸ்திதிக்கு வராமல் உயிரை எப்படியோ பிடித் துக் கொண்டிருக்கிறேன். ஆயினும், ஆகாரமே யில்லாத தனால் நான் களைத்துச் சக்தியற்றுத்தா னிருக்கிறேன். அச் சிறு குழந்தை பலங் குன்றித் திகிலடைந்து அந்த மூலையில் படுத்துக் கிடக்கிறது; அவளை அங்கிருந்து வெளிவரச் செய்ய

முடியவே யில்லை. நாங்கள் மரணத்தை எதிர்ப் பார்த்துக் கொண்டு இந்த ஸ்திதியில் கிடக்கிறோம்," என்றனள்.

எலீஷா இவ்வார்த்தைகளைக் கேட்டபின், தமது நண்பராகிய ஈபிமோடு அன்றே பிரயாணத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்று உத்தேசித்த எண்ணத்தை மாற்றி விட்டார். அன்றிரவு அங்கே தங்கி, மறு நாட்காலையில் அவ் வீட்டு வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தார். அவர் அடுப்பை மூட்டி ரொட்டி செய்வதற்குக் கிழவிக்கு உதவி புரிந்தார். பிறகு பெண்ணை அழைத்துக்கொண்டு அவசியமான பொருள்களைத் தேடிக்கொண்டு வர, அயல் வீடுகளுக்குச் சென்றார். கிராமத்தில் ஆகாரம், வஸ்திரம் முதலியவை கிடையா. எல்லாம் உண்டும், விற்றும் ஆய்விட்டன. எலீஷா மிகவும் அத்தியாவசியமான வஸ்துக்களைச் சேகரிக்க முயன்றார். அவைகளில் சிலவற்றைத் தாமே செய்தனர். மற்றுஞ் சில வற்றைப் பல விடங்களில் தேடிவாங்கினர்.

இங்ஙனம் அவர் மூன்று நாட்கள் அங்கே வசித்தார். அவர் செய்த உதவியினால் சிறுபையனுக்குக் கொஞ்சம் பலமுண்டாகி அங்கு மிங்கும் ஓடி, எலீஷாவோடு சிநேகஞ்செய்து கொள்ள வாரம்பித்தான். அந்தப் பெண் உடலிலும் இரத்தமூறினதால், அவள் முகம் பிரகாசமடைந்தது. அவள் எலீஷாவுக்கு உதவிபுரிந்து, "தாதா! தாதா!!" வென்று கூப்பிட்டுக்கொண்டு அவரைப் பின் தொடர்ந்த வண்ணமாகவே யிருந்தாள். கிழவியும் அயல் வீடுகளுக்குப் போய் வரக்கூடிய பலம் அடைந்தாள். குடியானவனும் சுவரைப் பிடித்துக்கொண்டு சிறிது தூரம் நடக்கலானான். அங்கிருந்த ஸ்திரீ மாத்திரம் குணமடைய வில்லை. ஆனால், மூன்றாவது நாளில் அவளுக்குத் தன் நினைவு வந்தது; பின்பு அவளும் ஆகாரம் வேண்டினள்.

பின்பு எலீஷா, "நல்லது! இப்பொழுது நான் புறப் படவேண்டும். இவ்வளவு காலம் தாமதிக்கும்படி நேரி

டும் என்று நான் நினைக்கவே யில்லை,'' என்று தமக்குள் தாமே ஆலோசிக்கலானார்.

---

## அத்தியாயம் V

நான்காம் தினம் உபவாச நாளாக விருந்தது; எலீஷா அன்றைய தினம் உபவாச மிருந்து, பாரணைக்கு வேண்டிய வைகளை வாங்கிவரவே அவர்கள் எல்லோரும் பாரணை செய்தனர். அன்று சாயங்காலம் தமது பிரயாணத்தை மறுபடியும் தொடங்கலாமென நினைத்தார். அவர் கிராமத்திற்குச் சென்று பால், மாவு முதலியவைகளைக் கொண்டு வந்து கொடுத்துக் கிழவிக்குச் சமையல் செய்வதற்கு உதவி புரிந்தார். மறுநாட் காலையில் கோவிலுக்குச் சென்று வீடு திரும்பி அவர்களுடன் பாரணை செய்தார். அந்த பலஹீனமான ஸ்திரீ அன்றைய தினம் எழுந்து சிறிது மெதுவாக நகர முயன்றாள். குடியானவன் எழுந்து க்ஷவரஞ் செய்துகொண்டு கிழவி சுத்தமாகத் தோய்த்து உலர்த்தி வைத்திருந்த ஷர்டைத் தரித்துக்கொண்டு ஒரு தனவந்தரைத் தனக்கு ஒரு சகாயம் செய்யும்படி வேண்டிக் கொள்ளக் கிராமத்திற்குள் சென்றான். அவனுடைய தானியமும், வயல்களும் அப்பணக்காரனான குடியானவனிடத்தில் அடமானம் வைக்கப்பட்டிருந்தன. புதிய சாகுபடியாகும் வரைக்கும், அவைகளைத் தன்னிடத்தில் ஒப்புவித்து வைக்கும் வண்ணம் அவரை வேண்டிக் கொள்ளுவதற்காக அவன் அவரிடம் சென்றான். அன்று சாயங்காலம் அவன் மிகுந்த துக்கத்துடன் தன் வீட்டிற்குத் திரும்பினான். அப்பணக்காரன் பணங்கொண்டு வந்தால்தான் நிலம் முதலானவைகளை அவனுக்குக் கொடுக்க முடியுமென்றும் இல்லாவிடில் முடியாதென்றும் மறுத்து விட்டான்.

B

எலீஷா இதைப்பற்றி ஆலோசிக்க வாரம்பித்தார்.

"இவர்கள் எவ்விதம் ஜீவிப்பார்கள்? மற்றவர்கள் வைக்கோல் சாகுபடி செய்து கொண்டிருக்கையில், இவர்கள் தமது வயலை அடமானம் வைத்திருப்பதனால், ஒன்றுஞ் செய்யாது வீணில் காலங்கழிக்க வேண்டியிருக்கிறது. இந்த வருஷம் விளைச்சலும் நன்றாக விருக்கலாம். மற்றவர்கள் நல்ல மாசூல் பலனை அனுபவிக்கையில், இவர்கள் மாத்திரம் தமது நிலத்தை அப்பணக்காரக் குடியானவனிடத்தில் அடமானம் வைத்திருப்பதால் ஒன்றுமில்லா திருக்கப்போகிறார்கள். நான் இப்பொழுது இவர்களை விட்டுப் போகும் பக்ஷத்தில், இவர்கள் முன்னிருந்த நிலைமைக்கு வந்துவிடுவார்கள் என்பதற்குச் சந்தேகமேயில்லை," என எலீஷா ஆலோசித்தார். அதனால், அவர் அன்று சாயங்காலம் போவதாக உத்தேசித்திருந்த எண்ணத்தை மாற்றி அடுத்த நாட் காலையில் புறப்படலாமெனத் தமது பிரயாணத்தைத் தள்ளிவைத்தார். பிறகு அவர் இரேழிப் பக்கத்தில் சென்று சயனித்துக் கொண்டார். கடவுளைத் தியானஞ் செய்தார்; நித்திரை போவதற்குக் கண்களை மூடினார். நித்திரை வரவில்லை. பிரயாணஞ் செய்ய வேண்டும் என்னும் எண்ணம் அவர் மனத்திற்கு வந்தது. இதுவரையிலும் மிகுந்த கால தாமதமும் பணச்செலவும் ஆய்விட்டன. ஆயினும், அவர் இவர்களுக்காக மிகவும் கிலேசப் பட்டார்.

பின்பு அவர், "நான் எல்லோருக்கும் உதவி செய்ய வேண்டுமென்று விரும்பினால் என்னால் முடியுமா? நான் இவர்களுக்கு ரொட்டித் துண்டுகளைக் கொடுத்துத் தண்ணீர் அருந்தச் செய்ய விரும்பினேன்; நான் இப்பொழுது இவர்கள் நன்செய் நிலங்களையும் புல் வயல்களையும், வாங்கித் தர வேண்டும்; இது ஆனதும், குழந்தைகளுக்குப் பாலுக்காகப் பசுவையும், சாகுபடியை ஏற்றிவரக் குதிரையையும் வாங்க வேண்டும். எலீஷா! நீ அகப்பட்டுக் கொண்டாய்! நன்

ருய் அகப்பட்டுக் கொண்டாய்!! நீ நங்கூரம் பாய்ச்சிவிட்டாய்; இனி மெதுவாகத் தப்பித்துக் கொண்டு விலக வேண்டும்,'' என அவர் தமக்குத் தாமே பேசிக் கொண்டார்.

அவர் தமது மனத்தைத் தெளிவு செய்யும்பொருட்டு எழுந்து உட்கார்ந்து தமது பொடி டப்பியை எடுத்து, ஒரு சிட்டிகைப் பொடி போட்டுக் கொண்டார். அதனுல் ஒரு லாபமும் தெரியவில்லை. எவ்வளவு நேரம் ஆலோசித்தும் அவர் ஒருவிதத் தீர்மானத்திற்கும் வரவில்லை. அவர் பிரயாணம் போக வேண்டியது நிச்சயமே; ஆனுல் அவர்களை விட்டு விலகுவதற்கு அவர் மனம் வரவில்லை.. இன்னது செய்வது என்று அவருக்குத் தெரியவில்லை. அவர் விடியற்காலம் வரையில் நித்திரை வராமல் புரண்டுகொண்டே கிடந்தார். கோழிகூவுந் தருணத்தில் சிறிது நித்திரை வந்தது. அப்பொழுது யாரோ ஒருவர் அவரை எழுப்புவது போலிருந்தது. உடனே அவர் தமது உடைகளை உடுத்துக்கொண்டு மூட்டையையும், தடியையும் எடுத்துக்கொண்டு பிரயாணம் புறப்படுவது போல் கனவு கண்டார். அவர் நுழைந்து செல்லும் வாயிற்படியின் கதவு உடம்பை ஒடுக்கிக்கொண்டு போகத்தக்க அவ்வளவு தான் திறக்கப்பட்டிருப்பதாகக் காணப்பட்டது. அவர் அதில் நுழைந்து செல்லப் பிரயத்தனிக்கையில், அவர் மூட்டை ஓரிடத்தில் மாட்டிக் கொண்டது. அவர் அதைச் சரிப்படுத்திக்கொள்ள முயலுகையில், அவர் அரைத் துணி மற்றொரு பக்கத்தில் பிடித்திழுக்கவே அது நழுவ ஆரம்பித்தது. அதைப் பிடித்திழுத்த ஒரு சிறுபெண், "தாதா! தாதா! ரொட்டி,'' என்று கதறி அவர்காலைக் கட்டிக்கொண்டழுதது. அவர் மறுபக்கம் திரும்பிப் பார்க்கையில், அங்கிருந்த பையனும் அவர் காலைப் பிடித்துக்கொண்டிருந்தான். அந்தக் கிழவியும் அம்மணிதனும் ஜன்னல் வழியாக இவரை

யுற்று நோக்கிக் கொண்டிருந்தார்கள். எலீஷா நன்றாக விழித்துக் கொண்டு, "நாளைய தினம் அந்நிலங்களை அடமானத்திலிருந்து மீட்டு விடுகிறேன். ஒரு குதிரையையும் வாங்குகிறேன்; குழந்தைகளுக்குப் பசுவும் வாங்குகிறேன். அடுத்த மாசூல் வரைக்கும் வேண்டியவளவு மாவும் வாங்கி வைக்கிறேன். கடல் தாண்டிக் கிறிஸ்துவைக் காணப் போவதை விட, என் ஆத்மாவுக்குள் துலங்கும் கிறிஸ்துவைக் காண்பதே மேலாகும். இவர்களுக்குத் தான் நான் உதவி புரியவேண்டும்." எனத் தமக்குள் நிச்சயித்துக் கொண்டார். பின்பு அவர் படுத்துக்கொண்டு சூரியன் உதிக்கும் வரையில் நித்திரை போனார்.

அவர் தமது வழக்கம் போல் யாவருக்கும் முன்பே எழுந்தார். உடனே, அவர் பணக்காரக் குடியானவனிடத்திற்குச் சென்று, அவனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து, எல்லா நிலங்களையும் மீட்டுக் கொண்டார். பிறகு புல்லரிவாள் ஒன்று வாங்கிக்கொண்டு குடிசைக்குச் சென்றார். வயலிலிருக்கும் புல்லை அரியும்படி அந்த வீட்டிலுள்ள மனிதனுக்குச் சொல்லி விட்டு, மறுபடியும் கிராமத்திற்குள் சென்றார். அங்கே ஒரு சத்திரத்தின் பக்கத்தில் ஒரு வண்டியும் குதிரையும் விற்பதற் கிருப்பதைக் கண்டு அவற்றை விலைபேசி வாங்கினார். பின்பு அவர் ஒரு மூட்டை மாவை வாங்கி அவ்வண்டியில் ஏற்றிக் கொண்டு பசு வாங்கும் பொருட்டுச் சென்றார். போகும் வழியில், இரண்டு ஸ்திரீகள் அடியில் வருகிறபடி அவர் முன் பேசிக்கொண்டு போனார்கள். அவர்கள் பேசுவது அவர் செவியில் விழுந்தது.

அவர்களில் ஒருத்தி, " அம்மா! இவரை நாம் சாதாரண மனிதரென்று எண்ணினோம். ஆனால், இவர் தண்ணீர் குடிப்பதற்கு அவர்கள் வீட்டிற்கு வந்ததாகச் சொன்னார்கள். பிறகு அவர்களோடு தங்கினார். அவர்களுக்காக என்

னென்னவோ வாங்கின வண்ணமாகவே யிருக்கிறார். இன்றைய தினம் அவர்களுக்காக அச்சத்திரத்தண்டை ஒரு வண்டியும் குதிரையும் வாங்கினார். அதை நான் என் கண்ணால் கண்டேன். இவரைப் போன்ற தரும குணம் பொருந்திய மனிதர்களை நான் இப்பூமியில் இதுவரையிலும் கண்டதேயில்லை," என்றாள்.

மற்றொருத்தி, "ஆ! அப்படியா!" என்று ஆச்சரியப் பட்டாள். இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டே போனார்கள்.

அவர்கள் தம்மைப் புகழுகிறார்கள் என்று அவர் தெரிந்து கொண்டார். கடவுளைப் புகழாது அவர்கள் தம்மைப் புகழ்ந்ததற்காக அவர் பரிதபித்தார். பின்பு அவர் பசுவையும் வாங்கிக் கொண்டு குடிசைக்குத் திரும்பினார். இதைக் கண்ட மனிதர்கள் இவை இன்னாருக்கு வாங்கப்பட்டனவென்று ஊகித்தவர்களாய் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள்.

பின்பு அவர் தாம் தங்கியிருந்த குடிசைக்குச் சென்றார். அந்தக் குடிசைக்குச் சொந்தக்காரன் கதவைத் திறக்க வந்தான். அவன், "சிற்றப்பா! இந்தக் குதிரையை எங்கே வாங்கினீர்கள் ?" என்று வினவினான்.

"ஏதோ வாங்கினேன்; அது மலிவாகக் கிடைத்தது. கொஞ்சம் புல் கொண்டு வந்து கொட்டிலில்போடு; இம்மூட்டையைத் உள்ளே எடுத்து வை," என்றார் கிழவர்.

பின்பு அந்த மனிதன் குதிரையையும் மாட்டையும் கொட்டிலில் கட்டி அவைகளுக்கு வேண்டியவளவு புல்லைப் போட்டு மூட்டையை வீட்டிற்குள் பத்திரமான விடத்தில் சேர்ப்பித்தான். எல்லோரும் இராப்போஜனம் உண்டு படுத்துக்கொண்டார்கள். எலீஷா தமது மூட்டையை எடுத்துக்கொண்டு இரேழியில் படுத்துக் கொண்டார். எல்லோரும் அயர்ந்து நித்திரை போகையில் அவர் தமது உடம்பில் சொக்காயையும் காலில் ஜோடுகளையும் போட்டுக்

கொண்டு தோளின்மீதுள்ள தமது தடியில் ஒரு மூட்டையைத் தொங்கவிட்டுக் கொண்டு ஈபிமைக் கண்டு பிடிக்கப் புறப்பட்டார்.

---

## அத்தியாயம் VI

எலீஷா மூன்று மைல் சென்றதும் விடியவாரம்பித்தது. அப்பொழுது அவர் ஒரு மரத்தினடியிலுட்கார்ந்து, தமது மூட்டையை அவிழ்த்து, அதில் பணம் எவ்வளவு மிகுந்து இருக்கிறதென்று எண்ணிப் பார்த்தார். பதினேழு ரூபிள்களும், இருபது காபெக்குகளும் இருந்தன.

"நல்லது! இப்பணத்தை வைத்துக்கொண்டு கடலைக் கடக்க என்னுல் இயலாது. நான் பிச்சையெடுக்க ஆரம்பித்தால், முன்னிலும் அதிக பாவத்தைச் செய்தவனுவேன். என் நண்பர் ஈபிம் தனியே சென்று கொண்டிருப்பர். அவர் எனக்காக ஒரு விளக்கு ஏற்றி வைக்க மாட்டாரா? ஆயினும், என் ஸங்கல்பம் என் மரணபரியந்தம் என்னை விட்டு விலகாது. கடவுளோ கருணாநிதி; அவர் என்னைக் கட்டாயம் மன்னித்தருள்வார்," என்று தமக்குள் எண்ணிக் கொண்டார்.

உடனே அவர் எழுந்து அந்த மூட்டையை முன்போல் தமது தோளின் மீதுள்ள தடியில் மாட்டிக்கொண்டு, தமது ஊரை நோக்கித் திரும்பினுர். அங்குள்ள ஜனங்கள் தம்மைக் கவனியாதிருக்க விரும்பி, அவர் அதிவேகத்துடன் அக்கிராமத்தைக் கடந்து சென்றுர். வீடு திரும்பிச் செல்லும் பிரயாணம் அவருக்கு வெகு சுலபமாகக் காணப்பட்டது.கடவுள் அவருக்குத் திடத்தை அளித்துச் சிரமத்தைக் காட்டாதது போலிருந்தது. அவர் உற்சாகத்துடன் தமது தடியை ஆட்டிக்கொண்டே நாள் ஒன்றுக்கு நாற்பத்தைந்து மைல் வீதம் சுலபமாக நடந்து சென்று கடைசியில் தமது வீட்டைச் சேர்ந்தார்.

அவர் தமது வீட்டையடைந்தபின், அவ்வருஷம் நன்ருக விளைந்து மாசூல் ஆய்விட்டது என்று தெரியவந்தது. அவர் குடும்பத்தினர் அந்தக் கிழவர் சௌக்கியமாக வீடு திரும்பி வந்ததற்காக அள்விறந்த ஆனந்த ·மடைந்தார்கள். அவர்கள் அவருடைய பிரயாணத்தைப் பற்றியும் அவர் நண்பர் எங்ஙனம் பிரிந்தார் என்பதைப் பற்றியும் மேல் பிரயாணஞ் செய்யாது அவர் ஏன் வீடு திரும்பினுர் என்பதைப் பற்றியும் மிகுந்த ஆவலுடன் அவரைக் கேட்டார்கள்.

எலீஷா அவர்கள் கேள்விகளுக்குப் பதில் ஒன்றும் விவரமாக உரையாமல், "ஏதோ இது கடவுள் கட்டளை; வழியில் பணம் செலவழிந்து விட்டது; என் நண்பரையும் பிரிந்து விட்டேன். ஆதலால் மேல் பிரயாணஞ் செய்ய இயலவில்லை. கிறிஸ்துவின் நிமித்தம் என்னை மன்னித்து விடுங்கள்," என்று மாத்திரம் பகர்ந்தார்.

பின்பு அவர் தமது கையில் மிகுந்திருந்த பணத்தைத் தமது கிழ மனைவியிடம் கொடுத்துவிட்டு, வீட்டு விவகாரங்களைக் கேட்க வாரம்பித்தார். எல்லாம் நன்ருக நடைபெற்றிருந்தன; ஒருவித அஜாக்கிரதையும் தவறும் காணப்படவில்லை. எல்லோரும் ஒற்றுமையுடனும் அமைதியுடனும் வாழ்ந்திருந்ததாகப் புலனுயிற்று.

ஈபிம் குடும்பத்தினர் எலீஷா வரவைக் கேள்விப்பட்டு, அன்றைய தினமே அவர் வீட்டிற்கு வந்து தங்கள் கிழவரைப்பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவர் தமது குடும்பத்தினருக்குச் சொல்லிய வண்ணமே விடையளித்தார். "ஈபிம் என்னைவிட்டுப் பிரிந்த சமயத்தில் சௌக்கியமாகவே யிருந்தார். நான் அவரைச் சேரவேண்டு மென்று முயன்றும் முடியாமல் போய்விட்டது. வழியில் என் பணமெல்லாம் செலவழிந்து போயின. அதற்குமேல் பிரயாணஞ் செய்ய இயலாமையால், நான் வீட்டிற்குத் திரும்பினேன்" எனப் பகர்ந்தார்.

இதைக் கேட்ட ஜனங்கள் மிகவும் கெட்டிக்காரரான இவர், பிரயாணம் புறப்பட்டு அதை முடிக்காது தமது பணத்தை யெல்லாம் வழியில் செலவழித்துவிட்டு வீடு திரும்பும்படி அவ்வளவு விவேகமின்றி இருப்பாரோ என ஆச்சரியமுற்றனர். பின்பு, அவர்கள் அதைப் பற்றிச் சிறிதுகாலம் பேசிக்கொண்டிருந்து நாளடைவில் மறந்தனர். எலீஷாவும் அவ்வாறே மறந்துவிட்டார். அவர் மறுபடியும் முன்போலவே தமது வீட்டு வேலைகளைச் செய்ய வாரம்பித்தார். அவர் மாரிக்காலத்தில் கட்டைகளை சேகரித்து வைக்கத் தமது குமாரனுக்கும், தானியங்களை அறைக்கத் தமது மனைவிக்கும் உதவி புரிந்து வந்ததன்றித் தானியச் சேர்களுக்குக் கூரைவேய்ந்தும், தேன் கூட்டினின்று தேனைச் சேகரித்தும், அயல் வீட்டுக் காரருக்குக் கொடுக்க வேண்டிய பத்துத் தேன் கூடுகளைக் குறைவின்றிப் பூர்ணமாக அபிவிருத்தியான கூடுகளுடன் அவர்களிடம் சேர்ப்பித்தும், தம்மால் இயன்ற உதவிகளைச் செய்த வண்ணமாக விருந்தார்.

அவருடைய கிழமனைவி பத்துக் கூடுகளை மாத்திரம் அயல் வீட்டுக்காரருக்குக் கொடுக்கவேண்டு மென்றெண்ணித் தன்னிடம் விருத்தியான ஏழு தேன்கூடுகளை மறைத்து வைக்க எத்தனித்தாள். ஆனால், எலீஷா இதைத் தெரிந்து கொண்டு பதினேழு தேன்கூடுகளையும் ஒளிக்காது கொடுத்தார். இந்த வேலைகள் முடிந்ததும், இவர் தம் குமாரனை வெளிவேலைகளுக்கு அனுப்பிவிட்டு வீட்டு வேலைகளைத் தாமே கவனித்து வந்தார்.

---

## அத்தியாயம் VII

பஞ்சத்தின் கொடுமையால் வருந்தும் குடியானவர்கள் குடிசையில் எலீஷா தங்கியிருந்தாரல்லவா? அன்று முழுவதும் ஈபிம் "அவர் வருவார்! வருவார்!!" என்று காத்துக்

கொண்டேயிருந்தார். அவர் சிறிது தூரம் நடந்தபின்னர் கீழே உட்கார்ந்தார். கடைசியில் அவர் அயர்ந்து நித்திரை போய்விட்டார்; பிறகு விழித்துக் கொண்டு வெகு நேரம் காத்திருந்தார். எலீஷா காணப்படவேயில்லை. சூரியன் மறையுந்தருணமான பின்பும் எலீஷா வரவில்லை. "ஒரு வேளை அவர் என்னைக் கடந்து சென்று விட்டாரோ! நான் தூங்குவதைக் கவனிக்காது போய்விட்டாரோ! அவ்வாறு என்னைப் பார்க்காமல் போக இயலாதே! நான் அவரைத் தேடிக்கொண்டு திரும்பிச் சென்றால், அவர் வெகு தூரம் எனக்கு மேல் கடந்து சென்று விடலாம். அப்பொழுது ஒருவரையொருவர் சந்திப்பதற்குச் சந்தர்ப்பமே நேரிடாது போய்விடும். ஆகையால் நான் மேல் நடந்து செல்லுவது நல்லது; இரவில் கட்டாயம் சந்திக்க நேரும்," என்று தமக்குள் எண்ணினர்.

பின்பு அவர் அடுத்த கிராமத்திற்குச் சென்றதும், அங்கிருந்த கிழவர் ஒருவரிடம் யாராவது தம்மைத்தேடி வந்தால், தாமிருக்கும் குடிசைக்கு அவரை அனுப்பும்படி சொல்லிவைத்தார்.

ஆனல், எலீஷா வரவேயில்லை. ஈபிம் தமது பிரயாணத்தை நிறுத்தாது, மேலே நடந்து சென்றார். அவர் தாம் செல்லும் வழியில் தமக்கு எதிரில் வருபவரையெல்லாம், "வழுக்கைத் தலையுள்ள கிழவர் ஒருவரைக் கண்டீரோ?" என வினவுவார். ஒவ்வொருவரும், "பார்க்கவில்லை" என்ற பதிலைத் தவிர வேறொன்றும் பகரார். ஈபிம் ஆச்சரியப் பட்டுக்கொண்டே தனியாக வழிநடந்தார்.

பின்பு அவர், "எலீஷாவை ஒடிஸாவில் சந்திக்கலாம்; இல்லாவிடில், கப்பலில்" என்று ஒருவாறு தேறுதல் செய்து கொண்டு மனக்கவலை கொள்ளாமலிருந்தார்.

சடையை யுடையவரும் "ஸ்கல்காப்" என்னும் ஒருவகைக் குல்லாவைத் தலையில் தரித்துக் கொண்டிருந்தவரு

மான யாத்திரைக்காரர் ஒருவரை அவர் ஒரு விடுதியில் சந்தித்து அவரோடு சம்பாஷணை செய்ததில், அவர் இரண்டாவது முறை ஜெரூஸலத்துக்குப் பிரயாணஞ் செய்வதாகத் தெரிந்தது. பின்பு அவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து மேல் பிரயாணஞ் செய்யலுற்றுர்கள்.

அவர்கள் இருவரும் ஒடிஸாவைச் சேர்ந்து கப்பலுக்காக மூன்று தினங்கள் காத்திருந்தார்கள். பல தேசங்களினின்றும், யாத்திரைக்காரர்கள் கூட்டங் கூட்டமாக வந்து நிறைந்திருந்தனர். ஈபிம் அங்கேயும் எலீஷாவைப் பற்றி விசாரித்தனர். ஒருவரும் அவரைக் கண்டதாகக் கூறவில்லை.

பிறகு அவர் ஐந்து ரூபிள்கள் கொடுத்து ஒரு அன்னிய தேச "பாஸ்போர்டும்" நாற்பது ரூபிள்கள் செலவழித்து, ஜெரூஸலத்திற்குப் போய்வரப் பிரயாணச் சீட்டும் பிரயாணத்தின்போது தேவையான ரொட்டி முதலியவைகளும் சேகரித்து வைத்துக் கொண்டார்.

அவருடன் வந்த பிரயாணி பணத்தை வீணுய்ச் செலவழியாது கப்பல் பிரயாணஞ் செய்யலாமென வழி சொல்லிக் கொடுத்தும், அவ்வார்த்தைகளை அவர் இலக்ஷியம் செய்யாது, "நான் பிரயாணச் செலவுக்கென்றே பணம் எடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன். ஆகையால் செலவு செய்வதில் தான் எனக்கு இஷ்டம்," என்று சொன்னுர்.

கப்பலில் சாமான்கள் எல்லாம் ஏற்றப்பட்டன. பிரயாணிகள் எல்லோரும் அதில் ஏறினுர்கள். ஈபிமும் அவர் புதிய சிநேகிதரும் ஏறிவிட்டார்கள். நங்கூரம் உயர்த்தப்பட்டது. கப்பல் நகர்ந்தது. முதல் நாள் பிரயாணம் மிகவும் ஆனந்தமாகவிருந்தது. ஆனுல் சாயங்கால வேளையில் காற்று அதிகரித்தது. மழை தாரை தாரையாகப் பொழிந்தது. அலைகள் வேகமாக அடிக்கவே, கப்பல் இங்குமங்கும் மிகவும் வேகமாய் அசைந்தது. ஜனங்கள் திகிலடைந்

தார்கள் ; ஸ்திரீகள் அழுது கூக்குரலிட்டார்கள் ; கோழை மனதுள்ள சிலமனிதர்கள் காப்பிடம் தேடி ஓடினர்.

ஈபிமும் நடுங்கினுர். ஆனுல், அவர் தம்முடைய சஞ்சலத்தை வெளியில் காட்டிக் கொள்ளவில்லே. அவர் முதலில் உட்கார்ந்த விடத்தை விட்டு அசையாது அன்றிரவும் அடுத்த நாள் முழுவதும் அங்கேயே இருந்தார். அங்கிருந்த பிரயாணிகள் ஒருவரோடொருவர் பேசாது, தங்கள் தங்கள் மூட்டைகளேக் கைகளால் இறுகப் பிடித்துக்கொண்ட வண்ணமாய், உட்கார்ந்திருந்தனர். இப்படி இரண்டு நாள் கழிந்தன. மூன்ருவது நாளில் ஆகாயம் சிறிது வெளுத்தது. ஐந்தாவது நாளில் எல்லோரும் "கான்ஸ்டாண்டிநோபிளேச்" சேர்ந்தனர்.

சில பிரயாணிகள் அங்கே யிறங்கி, துருக்கர்கள் வசத்திலிருக்கும், "ஸெயிண்டு ஸோபியா" என்னும் மாதா கோவிலேப் பார்க்கச் சென்றனர். ஆனுல் ஈபிம் மாத்திரம் கப்பலிலேயே தங்கிச் சிறிது ரொட்டித் துண்டு மாத்திரம் வாங்கினுர். அவர்கள் எல்லோரும் ஒரு நாள் அங்கே தங்கிய பின்னர், மறுபடியும் பிரயாணஞ் செய்து ஸ்மர்ளு, அலெக்ஸாண்டிரியா முதலிய விடங்களில் தங்கிக் கடைசியில் ஜ்யாபாவைச் சேர்ந்தார்கள். ஜ்யாபாவில் எல்லாப் பிரயாணிகளும் இறங்கி, அங்கிருந்து ஐம்பதுமைல் தூரம் நடந்து ஜெரூஸலத்தைச் சேரவேண்டும். உடனே கப்பலிலுள்ள பிரயாணிகள் இறங்கத் தொடங்கினர். ஆனுல் கப்பலினின்று தரையைச் சேருவதற்குப் பிரயாணிகள் அடைந்த நடுக்கம் நாவால் சொல்ல இயலாது. அந்தக் கப்பல் உயரமாக விருந்ததனுல், அவர்கள் இங்குமங்கும் அசைந்து கொண்டிருக்கும் படகுகளில் குதிக்கும்போது, தாங்கள் ஜலத்தில் தவறி விழுந்துவிடுவது நிச்சயமென எண்ணினர். அவர்கள் அவ்வாறு பயந்ததும் சரியென்றே சொல்ல வேண்டும். ஏனெனில், உண்மையில் இரண்டு

பிரயாணிகள் ஜலத்தில் விழுந்து ஒருவாறு காப்பாற்றப் பட்டுக் கரையை அடைந்தனர்.

பிறகு அந்த இரண்டு பிரயாணிகளும் காலால் நடந்து, மூன்றாவது நாள் மத்தியானத்தில் ஜெரூஸலத்தை அடைந்தனர். அவர்கள் நகரத்திற்கு வெளியில் ருஷியர்கள் இருக்குமிடத்தில் தங்கினர். அவர்களுடைய பாஸ்போர்டுகள் பரிசோதிக்கப்பட்டன. அவர்கள் சிறிது ஆகாரம் புசித்ததும், புண்ணிய விடங்களைத் தரிசிக்கச் சென்றனர். ஆனால், கிறிஸ்து அடக்கமான விடத்தைத் தரிசிக்க அப்பொழுது உத்தரவு கிடையாது.

ஆகையால், அவர்கள் பேட்ரியார்க்கல் என்னும் மடத்திற்குச் சென்றனர். அங்கே எல்லா யாத்திரைக்காரர்களும் வந்திருந்தார்கள். ஸ்திரீகள் ஒரு பக்கமும் புருஷர்கள் மற்றொரு பக்கமுமாய்ப் பிரிக்கப்பட்டிருந்தனர். பிறகு அவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் ஜோடு முதலியவைகளைக் கழற்றிவிட்டு வட்டமாக உட்கார்ந்தனர். அம்மடத்தைச் சேர்ந்த ஒரு சந்நியாசி ஒரு துவாலையை யெடுத்து வந்து அங்கு வந்திருந்தவர்கள் கால்களை அலம்பித் துடைத்து முத்தமிட்டனர். ஈபிமுக்கும் அங்ஙனமே செய்தனர். பிறகு யாத்திரைக்காரர்கள் அங்கே நிகழும் கடவுள் ஆராதனைகளைக் கண்ணுற்றனர். அவர்கள் எல்லோரும் ஸ்தோத்திரங்கள் செய்து தீபமேற்றித் தங்கள் நன்மைக்காகவும் தங்கள் உறவினர்கள் நன்மைக்காகவும் கடவுளை வேண்டிக்கொண்டனர். பின்பு அவர்கள் அவ்விடத்தில் தங்களுக்கு அளிக்கப்பட்ட அன்னபானாதிகளை உண்டனர். அடுத்த நாட்காலையில், அவர்கள் இருவரும் இகிப்து மேரி தபசு செய்த கோவிலுக்குச் சென்றனர். அவர்கள் அங்கேயும் தீபமேற்றிக் கடவுளை வழிப்பட்டனர். பிறகு கடவுளுக்குத் தமது குமாரனை யாகஞ் செய்த அப்ரஹாம் மடத்திற்குச் சென்று ஜிஹோவா தோட்டத்தைக் கண்ணுற்றனர். அதன் பிறகு

மேரிமாக்டலீனுக்குக் கிறிஸ்து பிரத்யக்ஷமான ஸ்தலத்தைத் தரிசித்து, கிறிஸ்துவின் சகோதரரான ஜேம்ஸின் கோவிலுக்குச் சென்றனர்.

ஈபிமுடன் வந்த யாத்திரிரைக்காரர் அவருக்கு அவ்விடங்களையெல்லாம் காண்பித்து, எந்தெந்த விடங்களில் எவ்வளவெவ்வளவு பணம் கொடுக்க வேண்டுமோ அதையும் தெரிவித்து வந்தார்.

கடைசியில் அவர்கள் இருவரும் போஜனம் செய்வதற்காக ஓர் விடுதிக்குச் சென்று அங்கே உண்ட பின்னர், நித்திரை போகத் தொடங்கினர். அப்பொழுது ஈபிமுடன் வந்த யாத்திரைக்காரன் கூக்குரலிட்டுத் தனது உடைப்பையைப் பரிசோதித்து "ஐயோ! என் பணப்பையைத் திருடிவிட்டார்களே! இருபத்து மூன்று ரூபிள்கள் வைத்திருந்தேனே! பத்து ரூபிள் நோட்டுகள் இரண்டும் மூன்று சில்லரை ரூபிள்களும் இருந்தனவே!" என்று கதறி அழுது துக்கப்பட்டான். அவன் பக்கத்திலிருந்தவர்கள் ஒன்றுஞ் செய்ய இயலாது நித்திரை போயினர்.

---

## அத்தியாயம் VIII

ஈபிம் மாத்திரம் நித்திரை போகாது படுத்தவண்ணமாய், "இவன் பணத்தை ஒருவரும் திருடியிருக்க முடியாதே! இவனிடத்தில் பணம் ஏது? ஓரிடத்திலும் இவன் பணம் எடுத்துக் கொடுக்க வில்லை; என்னைத்தான் கொடு என்று சொன்னான். என்னிடத்திலிருந்து ஒரு ரூபிள் வாங்கியும் இருக்கிறான்," என்று நினைத்தார். மறுபடியும் அவர் "அவனைப் பற்றி நான் நல்லது கெட்டது ஏன் நினைக்க வேண்டும்? நான் வீணில் பாவம் சம்பாதித்துக் கொள்ளுகிறேன். அதைப்பற்றி இனி நான் யோசிக்கப் போகிறதேயில்லை," என்று ஒருவாறு தம்மீதே குற்றஞ் சாட்

டிக்கொண்டார். மீண்டும் "அவர் இந்த யாத்திரைக்காரன் எவ்வளவு பணத்தாசை பிடித்தவனாக விருக்கிறான். தன் பணப்பை திருடு போய்விட்டதாக என்ன அசம்பாவித மான பேச்சுப் பேசுகிறான்? இவன் கையில் பணம் ஏது? எல்லாம் முழுப் புரட்டே தவிர வேறில்லை," என நினைக்க லானார்.

அதிகாலையில் அவர்கள் இருவரும் எழுந்திருந்து கட வுளை வழிபடும் பொருட்டுப் பெரிய கோவிலுக்குச் சென் றார்கள். அவர் கூடவந்த யாத்திரைக்காரன் அவரை அட் டைபோல் ஒட்டிக்கொண்டு அவர் போகுமிடமெல்லாம் அவரைப் பின்தொடர்ந்தான்.

அவர்கள் பெரிய கோவிலை யடைந்தார்கள். அங்கே ருஷியர்கள், கிரேக்கர்கள்; ஆர்மீனியர்கள், துருக்கர்கள், ஸிரியர்கள், முதலிய எல்லோரும் கூட்டம் கூட்டமாகத் திர ண்டிருந்தனர். வாயிற்படிக் கதவண்டை ஒரு கோவில் சந்நி யாசி வந்து அவர்கள் இருவரையும் அழைத்துச் சென்று, கிறிஸ்துவின் சரீரம் சிலுவையினின்று எடுக்கப்பட்டதும், அதற்குத் தைலம் தோய்க்கப்பட்டதும், நவ தீபங்கள் எரிந் துகொண் டிருந்ததுவுமாகிய ஓர் புண்ணிய இடத்தைக் காண்பித்தனர். அந்தச் சந்நியாசி, அந்தக் கோவிலிலுள்ள ஒவ்வொன்றையும் ஈபிமுக்கு நன்றாகக் காண்பித்து, விஷயங் களையும் விஸ்தாரமாகத் தெரிவித்தார். ஈபிம் அங்கேயும் தீப மேற்றிக் கடவுளை ஆராதித்தார்.

பிறகு சந்நியாசிகள் சிலுவை நிற்கும் 'கோல் கோதா' குன்றிற்கு வலப் பக்கமாகப் பிரயாணிகளை அழைத்துச் சென்று அக்குன்றின்மீது ஏறினர். அங்கேயும் ஈபிம் தோத்திரம் செய்தார். பிறகு அவர்கள் பாதாளஞ் செல் லும் துவாரத்தையும், கிறிஸ்துவின் கால்களும் கைகளும் சிலுவையில் அறையப்பட்ட விடத்தையும், ஆதாமின் எலும் பின்மீது கிறிஸ்துவின் உதிரம் விழுந்திருக்கும் ஆதாமின்

அடக்கல ஸ்தலத்தையும் கிறிஸ்து முள்கிரீடம் தரித்து உட்கார்ந்த கல்லையும் போர்வீரர்களால் அடித்துக் கட்டப்பட்ட ஸ்தம்பத்தையும் அவர் இருகால்களுக்கும் தொளைகள் செய்யப் பட்டிருந்த கல்லையும் காண்பித்தார்கள்.

சந்நியாசிகள் இவைகளைக் காண்பித்த பிறகு, இன்னும் சிலவற்றைக் காண்பிக்க விரும்பினர். ஆனால், ஜனங்கள் மிகவும் அலுத்துக் களைத்துப் போய் இயேசு பிரபு அடக்கமாயிருக்கிற புண்ணியஸ்தலத்தைப் போய்ப் பார்க்க அவசரப்பட்டனர். ஆகவே, ஈபிம் ஜனங்களுடன் அந்தப் பிரபு அடக்கமாயிருக்கிற குகையைத் தரிசனஞ் செய்யச் சென்றார்.

பின்பு ஈபிம் தம்முடன் வரும் பிரயாணியினால் தமது மனத்தில் பாவ எண்ணங்கள் இடைவிடாது உண்டாவதனால், அவனை எவ்வாறாயினும் விலக்கி விடுவது நல்லது என்று எண்ணிப் பலவிதங்களில் அவனை விலக்க முயன்றும் முடியவில்லை. ஏனெனில், அவர் எங்கே போனாலும் அவன் அவரைவிடாது தொடர்ந்த வண்ணமாகவே யிருந்தான். அவர்கள் இயேசு பிரபுவின் குகைக்கு முந்தி போக முயன்றும் தாமதமாகவே போக நேர்ந்தது. அங்கே எள்ளுப் போட்டால், எள்ளு விழ முடியாதபடி அவ்வளவு ஜன நெருக்கமாக இருந்தது. ஈபிம் தாம் இருந்தவிடத்திலேயே நின்று கடவுளை நேரில் பார்த்துக்கொண்டும், ஸ்தோத்திரஞ் செய்துகொண்டும், தமது பணப்பையை அடிக்கடி தடவிப் பார்த்துக்கொண்டும் நின்றார். அவர் மனம் சஞ்சலப்பட்டுக்கொண்டே யிருந்தது. ஒரு தருணத்தில் அவர் தம்முடன் வந்த யாத்திரைக்காரன் பொய் பேசுகிறானென்றும், மற்றொரு தருணத்தில் அது மெய்யாகவே யிருக்கலாமோவென்றும், அவன் பணம் திருட்டுப் போயிருந்தால், அவ்வாறே தமது பணமும் திருட்டுப்போக நேரிடலாமென்றும் அவர் பலவாறாக நினைக்கலுற்றார்.

இதுநிற்க, இவர் தோத்திரஞ் செய்துகொண்டு தேவாலயத்தில் சமாதியிருக்கும் இடத்தை நோக்கி நின்றார். சமாதியின் மீது முப்பத்தாறு தீபங்கள் எரிந்து கொண்டிருந்தன. ஜனக்கூட்டங்களின் தலைகளுக்கு மேலாக, அவர் சமாதியை நோக்கினார். அங்குள்ள தீபங்களின் கீழ் பவித்திரமான அக்கினி எரிந்து கொண்டிருந்தது. அங்கு, எல்லா ஜனங்களுக்கும் அப்பால் பளபளவென்று பிரகாசிக்கும் வழுக்கைத் தலையையுடைய ஒரு கிழவர் காணப்பட்டார். அவர் இவர் கண்களுக்கு எலீஷாவைப் போல் தோன்றினர்.

"ஆ அதோ, அவர் எலீஷாவைப்போல் இருக்கிறாரே! அது எப்படியிருக்க முடியும்! எனக்கு முன் அவர் எவ்வாறு இங்கு வந்திருக்க முடியும்? என் கப்பலுக்கு முந்தி புறப்பட்ட கப்பல் சுமார் ஒரு வாரத்திற்கு முன்பே புறப்பட்டிருக்க வேண்டும். அதில் அவர் ஏற முடியாது. அவர் என் கப்பலிலும் வரவில்லை. தவிர, நான் என் கப்பலி லுள்ள ஒவ்வொருவரையும் கவனித்துப் பார்த்தேன்." என்று ஈபிம் தமக்குள் ஆலோசித்துக் கொண்டிருக்கையில், அக்கிழவர் தமது பிரார்த்தனை செய்துவிட்டு மூன்று முறை கடவுளை வணங்கிப் பின்னர் கிறிஸ்தவக் கோயிலை வலப்பக்கத்திலும், இடப்பக்கத்திலும் மாறி மாறி வணங்குகையில், அவர் முகம் நன்றாகக் காணப்பட்டது. அப்போது ஈபிம் அவர் அடையாளத்தை நன்றாகத் தெரிந்து கொண்டார். அவருடைய கறுத்த சுருட்டை மயிர்த் தாடி, கன்னங்களிலுள்ள நரைத்த மயிர், அவர் கண் புருவங்கள், கண்கள், மூக்கு, முழு முகம், முதலியவற்றை அவர் கவனிக்கையில் அவர் எலீஷாவேயென அவருக்குத் தெளிவாய்த் தெரிந்தது.

பிறகு அவர் தமது நண்பரைக் கண்டு பிடித்ததற்காக

ஆனந்தங்கொண்டு, தமக்கு முன் அவர் எவ்வாறு வந்து சேர்ந்தார் என மிகுந்த ஆச்சரியத்தை அடைந்தார். "ஆ! என்ன சாமர்த்தியம்! இவர் எல்லோருக்கும் முன்னால் போயிருக்கிறாரே! யாராவது தெரிந்தவர் ஒருவர் இவருக்கு உதவிபுரிந்து இவரை முன்பே இங்கு அழைத்து வந்திருக்கவேண்டும். எல்லோரும் சென்ற பின் நான் அவரோடு கலந்துகொண்டு என்னுடன் இப்பொழுது வரும் இப் பிரயாணியை விட்டு விலகிவிடுகிறேன். எலீஷாவுடன் நான் கலந்துகொண்டால் அவர் கட்டாயம் எனக்கும் முதலிடத்தைத் தேடித் தருவர்." என ஈபிம் பலவற்றை எண்ணினவராய்க் கண் கொட்டாது அவரையே பார்த்துக்கொண்டிருந்தார். ஜனங்கள் சமுத்திரம் போல் இங்குமங்கும் புரண்ட வண்ணமாய்ச் சிலுவையை வணங்கும் பொருட்டு ஒருவர் மேல் ஒருவர் விழுந்து நெருக்கிக் கொண்டு போயினர்.

அப்போது ஈபிம் கூட்டத்தினால் ஒரு புறமாகத் தள்ளப் பட்டார். தமது பணப்பை கீழே விழுந்துவிடுமோ என்ற பயம் திடீரென அவர் மனத்திற்றோன்றியது. உடனே அவர் ஒரு கையால் தமது பணப்பையை இறுகப் பிடித்துக்கொண்டு அக் கூட்டத்தை விட்டுத் தப்பித்து வெளியே வர முயன்றார். பின்பு அவர் கூட்டமில்லாத இடத்திற்கு வந்து இங்குமங்கும் உலாவிக் கொண்டும் கோவிலிற்குள் சுற்றிப் பார்த்துக்கொண்டும் எலீஷாவைத் தேடிய வண்ணமாக விருந்தார். கோவிலைச் சுற்றியிருக்கும் அறைகளில் சிலர் உண்டுகொண்டும் சிலர் பானஞ் செய்துகொண்டும் சிலர் படுத்துக்கொண்டும் சிலர் உறங்கிக்கொண்டும் இருந்தனர். ஆனால், எலீஷா ஓரிடத்திலும் காணப்படவில்லை. ஈபிம் அவரைக் கண்டுபிடிக்க முடியாமல் தமது விடுதிக்குத் திரும்பிச்சென்றார். அவருடன் வந்த பிரயாணி அன்று மாலை கோயிலுக்கு வரவில்லை. அவர்

ரூபிள் பணமும் அவனுடன் போய்விட்டது. ஈபிம் இப்பொழுது தன்னந்தனியாக விடப்பட்டார்.

மறுநாள், அவர் தாம் பிரயாணஞ் செய்த கப்பலில் வந்த வயது சென்ற குடியானவர் ஒருவருடன் அதே கோவிலுக்குச் சென்றார். அங்கே அவர் எல்லோருக்கும் முந்தி போகப் பிரயத்தனப்பட்டார்; ஆனால், கூட்டத்தினால் பின் தள்ளப்பட்டு ஒரு ஸ்தம்பத்திற் சாய்ந்து நின்று கொண்டே பிரார்த்தனை செய்தார். அவர் முன் நோக்கிப் பார்க்கையில் எல்லோருக்கும் முதலில் சமாதியின் பக்கத்தில் தீபங்களின் கீழ் வழுக்கைத் தலை காந்தியினால் பிரகாசிக்கப் புஜங்களை உயரத் தூக்கிப் பிரார்த்தித்த வண்ணமாய் இருக்கும் எலீஷாவைக் கண்ணுற்றார். உடனே அவர், "இம்முறை நான் அவரை விடக்கூடாது," என்று ஊக்கத்துடன் கூட்டங்களை விலக்கிக்கொண்டு முன் போனார். அங்கே எலீஷா காணப்படவில்லை.

மூன்றாவது நாள் அவர் முன்போலவே பார்க்கையில், அதே யிடத்தில் எலீஷா தமது கைகளைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்தில் ஏதோவொன்றைப் பார்ப்பது போல் தோன்றினார். அவர் வழுக்கைத் தலை முன்னிலும் அதிகமாகப் பிரகாசிப்பதை அவர் கண்ணுற்று, "இம்முறை அவரைக் கட்டாயம் பிடித்து விடுகிறேன். நான் வெளி வாயிற்படியண்டை போய் இப்பொழுதே உட்கார்ந்து விடுகிறேன். அவர் என்னிடமிருந்து தப்பித்துப் போக முடியாது," என்று தீர்மானித்து அவ்வாறே போய் அங்கே அரைநாள் காத்திருந்தார். அந்த வழியாய்ப் பல ஜனங்கள் சென்றனரே யொழிய, எலீஷா மாத்திரம் தென்படவில்லை.

ஈபிம் ஜெரூஸலத்தில் ஆறு வாரங்கள் தங்கிப் பெதலிம், பேதானி, ஜார்டன் முதலான விடங்களுக்குச் சென்றார். பின்பு அவர் ஹோலி ஸிபல்கரில் தாம் அடக்கஞ் செய்யப்படவேண்டுமென்பதற்காக ஒரு முத்திரையும், ஷர்டும் வாங்

கிக்கொண்டு ஜார்டனிலுள்ள புண்ணிய தீர்த்தத்தை ஒரு "ஸீஸா"வில் பிடித்துக் கொண்டு, தமது உறவினர்கள் நற்கதி யடையும்பொருட்டு எட்டு ஸ்தலங்களில் பிரார்த்தித்து, அதற்கு வேண்டிய தக்ஷிணை செலுத்திப் பின்பு தமது வீட்டிற்குத் திரும்புவதற்குப் போதுமான பணம் மாத்திரம் கையில் வைத்துக் கொண்டார். மீதிப் பணம் எல்லாம் இம்மாதிரி விஷயங்களில் செலவழிந்து விட்டன. கடைசியில் அவர் பிரயாணப்பட்டு ஜ்யாபாவை அடைந்து கப்பலில் ஏறி ஒடிஸாவைச் சேர்ந்து, அங்கிருந்து கால் நடையாய் வீடு திரும்பினர்.

---

## அத்தியாயம் VIII

ஈபிம் முன்பு தாம் போன வழியே இப்பொழுதும் திரும்பி வரலானர். அவர் திரும்பி வரவர அவருக்கு வீட்டின் கவலை அதிகரித்தது. தாமில்லாத காலத்தில் வீட்டு விஷயங்கள் எவ்வாறு நடைபெற்றனவோ என அவர் கிலேச முற்றவராய், "ஒருவன் ஒரு வீடு கட்ட அவன் ஆயுட்காலம் முழுதும் வேண்டியிருக்கிறது. ஆனல், அவன் அதை யிடித்து நாசஞ்செய்வது ஒரு நிமிஷநேர வேலையாம். நானில்லாமல், என் குமாரன் வீட்டு விஷயங்களைச் சரிவரப் பார்த்திருக்கிருனே இல்லையோ? வஸந்தகாலம் சரியாக வந்ததோ இல்லையோ? ஆடு மாடுகள் குளிர் காலத்தில் நன்ருகப் பாதுகாக்கப் பட்டனவோ? குடிசை முடிவு பெற்றதோ?" என அவர் ஆலோசிக்கலுற்ருர்.

அவர் இப்படி நினைத்துக்கொண்டே சென்ற ஆண்டில் எலீஷாவைப் பிரிந்த விடத்திற்கு வந்து சேர்ந்தார். ஜனங்களின் அடையாளமே அவருக்குத் தெரியவில்லை. போன வருஷத்தில் பட்டினியும் பசியுமாக அங்குள்ள ஜனங்கள் அவஸ்தைப் பட்டார்கள். இப்பொழுது அவர்கள் சாப்

பாட்டுக்குக் குறைவின்றி உண்டு களித்தனர். சாகுபடி வெகு நன்ருகத் தேறினதால் சென்ற வருஷ கஷ்டங்களை அவர்கள் அறவே மறந்து அதிக சுகத்தை அனுபவித்தனர்.

ஈபிம் எலீஷாவைப் பிரிந்த இடத்திற்கு வந்து அங்குள்ள கிராமத்தில் பிரவேசிக்கையில், மாலைக்காலமாய் இருந்தது. அப்பொழுது வெண்மையான மேலங்கி தரித்துக் கொண்டிருந்த ஒரு சிறுபெண் தனது குடிசையிலிருந்து வெளியே ஓடி வந்து "தாதா! சின்ன தாதா! வீட்டிற்கு வாருங்கள்!" என்று அவரை அழைத்தது.

ஈபிம் அந்தப் பெண்ணினிடமிருந்து தப்பித்துப் போக முயன்றும், அது அவர் உடையைப் பிடித்துச் சிரித்துக் கொண்டே குடிசையின் வாயிற்படியண்டை வந்தது; அங்கே ஒரு சிறு பையனுடன் நின்றிருந்த ஒரு ஸ்திரீ "தாதா! வாருங்கள்; இரவில் இங்கேயே போஜனஞ் செய்துவிட்டு இளைப்பாறி நித்திரை செய்யுங்கள்" என்று உபசரித்தனள்.

ஈபிம் அதன் உள்ளே நுழைந்ததும், "இந்தக் குடிசையில்தான் எலீஷா தாகசாந்தி செய்துகொள்ளும் பொருட்டுச் சென்ருர். இவர்களை விசாரித்தால் அவர் விஷயம் நன்ருகத் தெரியும்," என எண்ணினுர்.

பின்பு அம்மாது அவர் தோளிலிருந்த மூட்டையை இறக்கி, முகம் கால் கழுவிக் கொள்ளத் தண்ணீர் கொடுத்துப் போஜனத்திற்குப் பீடம் போட்டு உட்காருவித்து, ரொட்டி, பால், இனிய பழங்கள் முதலியவைகளைக் கொடுத்து உபசரித்தனள். ஈபிம் அளவற்ற ஆனந்தமடைந்து விருந்தினர்க்கு இவ்வளவு உபசாரஞ் செய்பவர்களை நான் இதுவரையில் கண்டதில்லையென்று அவர்களைப் புகழ்ந்து அவர்களுக்கு மனமுவந்த வந்தனத்தை அளித்தார்.

உடனே அந்த ஸ்திரீ தன் தலையை அசைத்து, "நாங்கள் அன்னியர்களை உபசரியாது இருக்க முடியுமா? ஒரு அன்னி

யர் தான் எங்களுக்கு உயிரைக் கொடுத்தார். நாங்கள் கடவுளை நினைக்காது காலங் கழித்ததற்காக மரணத்திற்குச் சமானமான கஷ்டங்களை அனுபவிக்கும்படி தண்டிக்கப் பட்டோம். சென்ற கோடைக் காலத்தில் உண்பதற்கு ஒன்று மில்லாது இதே குடிசையில் நாங்கள் எல்லோரும் வியாதியால் அவஸ்தைப் பட்டோம். அப்பொழுது உங்களைப் போன்ற கிழவர் ஒருவரைக் கடவுள் அனுப்பாதிருந்தால், நாங்கள் எல்லோரும் இறந்திருப்போம். ஒரு நாள் நடுப்பகலில் குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று அவர் உள்ளே வந்தார். அப்பொழுது அவர் எங்கள் நிலைமையைக் கண்டு பரிதபித்து எங்களோடு தங்கினார். அவர் எங்களுக்குத் தண்ணீர் கொடுத்து உணவளித்து எல்லாவித உதவியும் புரிந்தார். அவர் எங்கள் நிலங்களை மீட்டுக் கொடுத்ததன்றி, குதிரை, வண்டி முதலியவைகளையும் வாங்கிக் கொடுத்த பின் எங்களை விட்டு அகன்றனர்" என்றாள்.

அச்சமயத்தில் ஒரு கிழவி அங்கு வந்து, "ஐயா! பெரியவரே! அவர் மனிதரோ? கடவுள் அனுப்பிய தூதரோ? அறியோம். அவர் இன்னாரென்று எங்களுக்கு இதுவரையில் விளங்கவில்லை. அவர் எங்கள் எல்லோரையும் அன்புடன் விசுவாசித்தார். அவர் எங்கள்பால் மிகுந்த கருணை பாராட்டினார். அவர் எங்களுக்குப் புரிந்த பேருதவிகளுக்குக் கைம்மாறாக வையகமும் வானகமும் அளிக்கினும் அவைமிகச் சிறியனவேயாகும். கடைசியில், அவர் எங்களிடம் யாதொன்றும் சொல்லாமலே போய்விட்டனர். அவரைக் குறித்துப் பிரார்த்தனை செய்ய, அவர் தமது பேரையும் எங்களுக்குத் தெரிவிக்கவில்லை. எல்லாவிஷயங்களும் இன்றுதான் நடந்தவை போலிருக்கின்றன. நான் இறப்பதற்குச் சித்தமாக விருக்கையில், வழுக்கைத் தலையுடன் கூடிய ஒரு சிறு கிழவர் எங்கள் குடிசையில் நுழைந்தார். அவர் பார்வைக்கு வெகு சாமானி

யர். அவர் குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று எங்களைக் கேட்டனர். நான் பாவ புத்தியுடன், அவருக்கு இங்கே என்ன வேண்டியிருக்கிறது? என்று ஆலோசனை யின்றி எண்ணினேன். எங்கள் நிலைமையைக் கண்டதும் அவர் தமது மூட்டையை இங்கே வைத்து அதை அவிழ்த்தனர்." என்றாள்.

"இல்லை, பாட்டி! அவர் முதலில் அதைத் தரையில் வைத்துப் பிறகுதான் பெஞ்சியின் மீது வைத்தார்," என்று சிறு பெண் தன் பாட்டியைத் திருத்தினள்.

இவ்விதம் எல்லோரும் அவரைப் பற்றிச் சம்பாஷிக்கத் தொடங்கினர். உடனே அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் செய்கையும் அவர்கள் எல்லோருடைய ஞாபகத்திற்கும் நன்றாக வந்தன. அவர் உட்கார்ந்த இடத்தைப் பற்றியும், பேசிய பேச்சுக்களைப் பற்றியும், அவர் செய்த செய்கைகளைப் பற்றியும் எல்லோரும் உற்சாகத்துடன் சம்பாஷித்தனர்.

அன்று சாயங்காலம் அந்த வீட்டுக்குச் சொந்தக்காரன் வந்தான். அவனும், எலீஷாவைப் பற்றியும், அவர் செய்த உபகாரங்களைப் பற்றியும் பேசினான்:—" அவர் இங்கு வாராதிருந்தால், நாங்கள் எங்கள் பாவங்கள் பின்தொடர மரித்திருப்போம். எங்களுக்கு வேறு கதி யில்லாமையால், நாங்கள் கடவுளையும் மனிதர்களையும் ஒரு நாவால் சபித்துக் கொண்டே மரணவஸ்தையில் உழன்றோம். எங்களுக்கு அப்பொழுது ஜீவனை அளித்தவர் அவரே. தவிர, அவர் கடவுளை நினைக்கவும் மனிதர்களிடம் இயற்கையில் நற்குணம் பொருந்தி யிருக்கிறதென்னும் உண்மையை அறியவும் செய்தனர்" என்றான்.

பின்பு அவர்கள் ஈபிமுக்கு உணவு முதலியவைகள் அளித்து, அவர் உறங்குவதற்கு ஒரு நல்லிடத்தைக் காண்பித்துத் தாங்கள் படுக்கச் சென்றனர்.

ஈபிமுக்கு நித்திரை வரவில்லை. அவர் எலீஷாவையே

நினைத்துக் கொண்டிருந்தார். ஜெரூஸலத்திலுள்ள கோவிலில் அவரை மூன்று முறை கண்ட காட்சி அவர் மனத்தில் நிலைத்து நின்றது.

பின்பு ஈபிம், "ஆ! எலீஷா இவ்விதமாக எல்லோருக்கும் முந்தி கடவுள் சன்னிதானத்தை யடைந்தனரா! நான் இவ்வளவு காலம் பட்ட சிரமமெல்லாம் கடவுள் அங்கீகாரம் பெறாது வீணிற் போயினவே! எலீஷாவின் சிரமங்களெல்லாம் அங்கீகரிக்கப் பட்டன என்பதற்கு ஐயமே யில்லை," என அவர் பலவாறு நினைத்தார்.

மறுநாட்காலை அவர் அவர்களிடத்திலிருந்து விடைபெற்றுக் கொண்டனர். அவர்கள் அவருக்கு வேண்டிய உணவையும், பதார்த்தங்களையும் கட்டிக் கொடுத்தனுப்பினார்கள். பின்பு அவர் அவ்விடம் விட்டுப் புறப்பட்டனர்.

---

## அத்தியாயம் IX

ஈபிம் சுமார் ஒருவருஷ காலம் யாத்திரை செய்தார். பின்பு அவர் தமது ஊருக்கு வந்து சாயங்காலம் தமது வீடு போய்ச் சேர்ந்தார். அவர் வந்த சமயத்தில் அவர் குமாரன் வீட்டில் இல்லை. அவன் கள்ளுக் கடைக்குப் போயிருந்தான். அவன் நன்றாய்க் குடித்து விட்டுத் தன் வீடு வந்து சேர்ந்தான். ஈபிம் அவனைப் பற்றி விசாரிக்க, அவன் அவர் இல்லாத காலத்தில் குடித்துக் களித்திருந்தா னென்றும் வீட்டு வேலை யொன்றுங் கவனிக்காது பணத்தை யெல்லாம் வீண் செலவு செய்து விட்டானென்றும் தெரிய வந்தது. பின்பு ஈபிம் அவனைக் கண்டிக்க, அவன் "நீ ஏன் யாத்திரை சென்றாய்? உன்னை இங்கே இருக்க வேண்டாமென்று சொன்னவர் யார்? நீ பணத்தை யெல்லாம் பிரயாணத்திற்கு எடுத்துச் சென்று செலவழித்து விட்டு இப்பொழுது என்னிடத்தில்

பணத்தை எதிர்ப் பார்க்கிருயா?'' என்று அவரை எதிர்த்துக் கூறினன். உடனே அவர் கோபங்கொண்டு அவனை அடித்தார்.

அடுத்த நாட்காலை ஈபிம் தமது குமாரனைப் பற்றிப் பேசும் பொருட்டுக் கிராமத் தலைவரிடத்திற்குச் செல்லுகையில், அவர் எலீஷா வீட்டைக் கடந்து செல்ல நேர்ந்தது. அப்பொழுது வாயிற்படியில் நின்று கொண்டிருந்த எலீஷா மனைவியாகிய கிழவி ஒருத்தி அவரை நோக்கி, "காலை வந்தனம், நண்பரே! நீர் எப்பொழுது வீடுவந்து சேர்ந்தீர்?'' என அவரை வினவினள்.

உடனே ஈபிம், "கடவுள் அனுக்கிரகத்தால் என் யாத்திரை நன்ருகவே முடிந்தது. ஆனல், உங்கள் கிழவரை வழியில் பிரிந்துவிட்டேன். அவர் வீடு வந்து சேர்ந்து விட்டார் என்று நான் முன்பே கேள்விப் பட்டேன்,'' என்ருர்.

இதைக் கேட்ட அந்தக் கிழவியும் பேச ஆரம்பித்தாள். பேசுவதென்ருல் அவளுக்கு மிகவும் பிரியம் :—

"ஆம்! அவர் முன்பே வந்துவிட்டார். கடவுள் எங்கள் போஷகரைப் பத்திரமாகக் கொண்டுவந்து சேர்த்ததற்காக நாங்கள் மிகுந்த சந்தோஷங் கொள்கிருேம். அவர் இல்லாத சமயத்தில் எங்கள் வீடு பாழடைந்தது போலிருந்தது. அவருக்கு அதிக வயதாய் விட்டதால், வேலை செய்ய அவரால் முடியவில்லை. ஆயினும், அவர்தான் எங்கள் எஜமானர்; அவர் முன்னிலையில் நாங்கள் எப்பொழுதும் ஆனந்தமாக விருக்கிருேம். அவரிடம் எங்கள் பையனுக்கு இருக்கிற அன்பிற்கு அளவேயில்லை. அவர் இல்லாவிட்டால் 'சூரிய வெளிச்ச மில்லாதது போலிருக்கிறது' என்று அவன் சொல்கிருன். உண்மையில் அவரில்லாவிட்டால் எங்களுக்கு மிகவும் கஷ்டமாகவே இருக்கிறது. ஏனெனில், அவர் மீது எங்களுக்கிருக்கும் அன்பைச் சொல்ல முடியாது,'' என்றனள்.

"சரி, அவர் இப்பொழுது உள்ளே இருக்கிறாரோ?" என்றார் ஈபிம்.

"அவர் தேனீக்களைக் கவனித்துக்கொண்டு தோட்டத்திலிருக்கிறார். இந்த வருஷம் தேனீக்கள் வெகு நன்றாக வளர்ந்துகொண் டிருக்கின்றனவாம். நாம் செய்கிற பாவங்களுக்குக் கடவுள் அளிக்கிற கொடை அதிகமே; நண்பரே! நீர் போய் அவரைக் கண்டால் அவர் வெகு சந்தோஷப்படுவார். நீங்கள் உள்ளே போய்ப் பாருங்கள்" என்றாள் கிழவி.

ஈபிம் முற்றத்தின் வழியாகத் தேனீத் தோட்டத்திற்குள் நுழைந்தார். ஜெரூஸலத்திற் கண்டது போலவே எலீஷா தமது கைகளை உயர்த்திக்கொண்டு ஆகாயத்தை நோக்கின வண்ணமாய் நிற்பதையும் அவர் வழுக்கைத் தலை பிரகாசித்துக் கொண்டிருப்பதையும் அவர் கண்ணுற்றார். மரத்தினிழலில் எலீஷா நின்று கொண்டிருப்பதையும், மரத்தின் மீது சூரியன் ஜோதி போல் பிரகாசிப்பதையும், பொன்னிறமான தேனீக்கள் அவர் தலையைச் சுற்றி ரீங்காரஞ் செய்துகொண்டு தெய்வ காந்தி போல் ஜொலிப்பதையும் ஈபிம் கண்ணுற்றுப் பிரமித்தார்.

பின்பு அக்கிழவி தன் கணவனை நோக்கி, "இதோ! நமது நண்பர் வந்திருக்கிறார்," எனத் தெரிவிக்க, அவர் திரும்பி வந்து தமது நண்பரைக் கண்டு மனமுவந்து, "உமக்குக் கடவுள் அருள் புரிவாராக! உமக்குக் கடவுள் அருள் புரிவாராக!! நல்லது! நீர் எப்பொழுது திரும்பி வந்தீர்?" என வினவினார்.

அதற்கு அவர், "ஆம்! நான் பிரயாணஞ் செய்துவந்தேன். உங்களுக்கு ஜார்டனிலிருந்து புண்ணிய தீர்த்தம் கொணர்ந்திருக்கிறேன். அதைப் பெற்றுக் கொள்ளும். என் சிரமங்களை யெல்லாம் கடவுள் அங்கீகரித்தாரா என்று தெரியவில்லை..." என்றனர்.

"நல்லது! கடவுள் அனுக்கிரகிப்பார். கிறிஸ்து காப்பாற்றுவார்!" என்றார் எலீஷா.

இதைக் கேட்டு ஈபிம் மௌனமாக விருந்தார்.

கடைசியில் ஈபிம், "நண்பரே! நான் அங்கே சென்றேன். ஆனால், என் ஆத்மா அங்கேயிருந்ததோ அல்லது வேறொருவர் ஆத்மா அங்கே யிருந்ததோ எனக்குத் தெரியவில்லை," என்றார்.

"நண்பரே! எல்லாம் கடவுள் செயல்; எல்லாம் அவர் அருள்," என்றார் எலீஷா.

"நான் திரும்புகையில் நீர் முன்பு தங்கின குடிசையில் தங்கினேன்..." என்று, ஈபிம் மேலும் பேச ஆரம்பிக்கையில், எலீஷா திடுக்கிட்டவராய் அவரை மேலே பேச விடாமல், "எல்லாம் கடவுள் செயல்" என்று சொல்லிப் பின்பு, "நண்பரே! உள்ளே வந்து சிறிது இளைப்பாறும்; கொஞ்சம் தேன் கொண்டு வருகிறேன்; சிறிது அருந்தும்," என உபசரித்து அவர் சம்பாஷணையை வீட்டு விஷயங்களைப் பற்றிப் பேசுவதில் மாற்றி விட்டார்.

பின்பு அவர் பெருமூச்சு விட்டு, ஜெரூஸலத்தில் எலீஷாவைக் கண்ட காட்சியைப் பற்றியும், அவரைக் குறித்து அக்குடிசையில் ஜனங்கள் பேசிக் கொண்ட பேச்சைப் பற்றியும் பேசாது விட்டுவிட்டார்.

ஆனால் அவர், "இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் கடவுள் நியமித்த இடத்தில் இருந்து கொண்டே தனது மரண பரியந்தம் அன்பினாலும், நற்கருமங்களாலும் தர்மமாக நடந்து கொண்டு தனது வாணாளைக் கழிப்பதே கடவுளை ஆராதிக்கும் மார்க்கம்," என்பதை ஐயமறத் தெரிந்து கொண்டார்.

---

# சிறுநெருப்பும் பெருநெருப்பும்

பீடர் என்னும் பெரியவர் ஒருவர் ஏசுவினிடம் சென்று, "பிரபுவே! என் சகோதரன் எனக்குத் தீங்கிழைக்கும் புக்ஷத்தில் எத்தனை முறை அவனை நான் மன்னிக்கவேண்டும்? ஏழுமுறை மன்னித்தால் போதுமா?" எனக்கேட்டார். அதற்கு அவர், "ஏழுமுறை மன்னித்தால் போதுமென்று நான் சொல்லமாட்டேன்; எழுபத்தேழு முறையானாலும் மன்னித்து விடு என்று சொல்லுவேன்", எனத் திருவாய் மலர்ந்தனர்.

கடவுளின் மோக்ஷ ராஜ்ஜியம் பல வேலைக்காரர்களோடு கூடிய ஓர் அரசுக்குச் சமானம்:—

ஓர் ஊரில் ஓர் அரசன் இருந்தான். அவன் தன்னிடம் வேலைசெய்யும் ஒவ்வொரு வேலைக்காரனுடைய கணக்கு வழக்குகளைத் தீர்மானஞ் செய்து வந்தான்; அப்போது ஆயிரம் பவுன்கள் கடன் கொடுக்க வேண்டிய ஒரு வேலைக்காரன் அந்த அரசனிடமிருந்தான். அவன் தன் கடனைக் கொடுக்க வியலாததினால், அவனுடைய ஆஸ்தி, மனைவி, மக்கள் எல்லாரையும் விற்றுத் தன்கடனைத் தீர்க்கும்படி அந்த மன்னன் ஆக்ஞாபித்தான். அப்பொழுது அவ்வேலைக்காரன் அரசன் காலில் விழுந்து வணங்கி, "பிரபுவே! என்னை இப்பொழுது விட்டுவிடுங்கள்; நான் எல்லாக் கடனையும் காலக் கிரமத்தில் தீர்த்து விடுகிறேன்," என்று வேண்டிக்கொண்டனன். உடனே அந்த அரசன் மனமிரங்கி, அவனை விட்டு விடும்படி உத்தாவு செய்து அவன் கடனையும் இனமாய்த் தள்ளிவிட்டான்.

இது நிற்க, அவ்வேலைக்காரனுக்கு வேறொருவன் நூறு ரூபாய் கடன் கொடுக்கவேண்டி யிருந்தது. அவன் தன்கடன்காரனைப் பிடித்துக்கொண்டு, "இப்பொழுதே என் பணத்தைக் கீழே வைத்துவிடு," என்று நிர்ப்பந்தஞ் செய்தனன்.

அப்பொழுது கடன்காரன் அவன் காலில் விழுந்து, "ஐயா! என்னை நிர்ப்பந்திக்காது சிறிது பொறுத்துக் கொள்ளும்; நான் கடனைத் தீர்த்து விடுகிறேன்," எனப் பலவாறாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டனன். ஆனால் அவன் அந்த வார்த்தைகளைச் சிறிதும் பாராட்டாது, தன் கடன் தீர்க்கும் வரையில் அவனைச் சிறையில் அடைத்தனன்.

இவ்விஷயங்களை யெல்லாம் மற்ற வேலைக்காரர்கள் கேள்வியுற்று மிகவும் வருந்தி அவற்றைத் தமது மன்னனிடத்தில் தெரிவித்தனர். உடனே அம்மன்னன் அந்த வேலைக்காரனை யழைத்து, "ஏ! போக்கிரீ! நீ என்னை வேண்டிக் கொண்டதற்காக நான் உன் கடன்களை மன்னித்தேன். நான் உன்னிடத்தில் இரக்கங் காட்டிய வண்ணம் உன்னிடத்தில் கடன் வாங்கின உன் வேலைக்காரனிடத்தில் நீயும் இரக்கங் கொள்ள வேண்டாமா?" எனக்கூறி அவன் மீது மிகுந்த கோபங்கொண்டு அவன் தன் கடன் முழுதும் கொடுக்கும் வரையில் அவனைக் கடுங்காவலி லிருக்கும்படி ஆக்ஞாபித்தான்.

நமது சகோதரரை நாம் மனமாற மன்னிக்காவிடில் மோக்ஷ ராஜ்ஜியத்திற்கு மன்னராகிய நமது தெய்வத் தகப்பனார் நம்மை ஒருபோதும் மன்னிக்க மாட்டார்.

---

ஒரு கிராமத்தில் ஐவான் என்ற நாமம் வாய்ந்த ஒரு குடியானவன் வசித்து வந்தான். அவன் நல்ல ஸ்திதியுள்ளவனும் திடகாத்திரனும் அந்தக் கிராமத்திலுள்ளவர்கள் எல்லாரிலும் சிறந்தவனென்று கீர்த்தி வகித்தவனுமாயிருந்தான். அவனுக்கு மூன்று குமாரர்களிருந்தார்கள். அவர்களில் மூத்தவனுக்குக் கலியாண மாய்விட்டது; இரண்டாவது குமாரன் கலியாணஞ் செய்து கொள்ளும் பருவமடைந்திருந்தான்; மூன்றாவது வாலிபன் குதிரைகளை மேய்க்கவும், வயல்களை உழவும் கற்றுக்

கொண்டிருந்தான். ஐவானின் மனைவி சாமர்த்தியம் அமைந்த குடித்தனக்காரி. அவளுடைய மருமகள் பொறுமையும் உழைப்பு முள்ளவள். அக்குடும்பத்தில் வேலை செய்யச் சக்தியற்றவராய்ப் போஷிக்கப் படுகிறவர் ஐவானின் வயது சென்ற தகப்பனார் ஒருவர்தான். அவர் சுமார் ஏழு வருஷங்களாகச் சுவாசகாச நோயால் மிகக் கஷ்டப் பட்டுக்கொண்டு, படுத்த படுக்கையை விட்டு நகராதிருந்தார்.

ஐவானுக்கு ஒரு குறைவுமில்லை; அவனிடம் மூன்று குதிரைகளும் ஒரு சிறு கழுதைக் குட்டியும் ஒரு பசுவும் அதன் கன்றும் பதினைந்து ஆடுகளும் இருந்தன. அவன் வீட்டிலுள்ள ஸ்திரீகள் மனிதர்களின் மேலுடைகளையும், காலுடைகளையும் நெய்வர்; வயலில் உழைப்பர்; வீட்டுக் காரியங்களைச் சிரத்தையுடன் செய்வர். புருஷர்கள் வெளியிற் சென்று சம்பாதித்து வருவர். அதனால் அவர்கள் ஆகாரத்திற்கு எப்பொழுதும் குறைவே கிடையாது. சென்ற வருஷத்தின் தானியங்கள், மறு வருஷத்தில் புதிய தானியங்கள் வந்த பின்பும் வெகு காலத்திற்கு மிகுந்து கிடக்கும். "ஓட்" என்னும் தானியம் மாத்திரம் வரி செலுத்துவதற்கும் மற்றச் சில்லரைச் செலவுகளுக்கும் சரிப்பட்டுப் போகும். ஐவான் தன் குழந்தைகளுடன் சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் வசித்துவரக் கூடுமாயினும், வேலிக்கு அப்புறமிருக்கும் நொண்டி கேப்ரியலினால் அவன் நிம்மதியாக ஜீவிக்க முடியவில்லை.

கேப்ரியலினுடைய தகப்பனார் உயிரோடு வாழ்ந்திருக்கையில், ஐவானின் தகப்பனாரும் அவரும் மிகுந்த நண்புடன் வாழ்ந்து வந்தனர். அவ்விருவர்களுடைய வீட்டு ஸ்திரீகளுக்குச் சல்லடையாவது "பக்கெட்" என்னும் தொட்டியாவது வேண்டிய போதிலும், புருஷர்களுக்குச் சாக்காவது, சக்கரமாவது வேண்டிய போதிலும், அவர்கள் அவைகளைக் கொடுத்தும் வாங்கியும், வேண்டிய சமயங்

களில் ஒருவருக்கொருவர் உதவி புரிந்தும் உண்மையான சிநேகத்துடன் பழகிவந்தனர். ஒருவர் கன்று ஒருவர் வயலில் பிரவேசித்தால், அதை அவர்கள் துரத்தி அதன் சொந்தக்காரரிடத்தில் 'அவ்விஷயத்தைத் தெரிவித்து ஜாக்கிரதையாக விருக்கச் சொல்லுவரே யொழிய அதைப் பட்டியில் அடைப்பதாவது, ஒருவர் மீது ஒருவர் பொல்லாங்கு சொல்லிக் கொள்ளுவதாவது கிடையாது. அந்தக் கிழவர்கள் காலத்துச் சமாசாரம் இது. ஆனால், அவர்கள் குமாரர்கள் எஜமானர்கள் ஆனபொழுது இவைகள் மாறுபட்டன.

ஐவானின் மருமகளுக்குச் சொந்தமான ஒரு கோழி ஈஸ்டருக்கு முந்தி வந்த பரிசுத்த வாரத்தில் அதிகாலையில் முட்டையிட வாரம்பித்தது. அது ஒவ்வொரு நாளும், களஞ்சியத்திற்குப் பக்கத்திலிருக்கும் வண்டிப் பெட்டியில் முட்டையிடுவது வழக்கம். ஒரு நாள் ஐவான் குழந்தைகள் அந்தக் கோழியைப் பயமுறுத்தவே, அது வேலியின்மீது பறந்து கேப்ரியல் வீட்டுக்குச் சென்று அங்கே முட்டையிட்டது. ஐவானின் மருமகள் தன் கோழியின் "க்ளக், க்ளக்," என்னும் சப்தத்தைக் கேட்டு, "எனக்கு இப்பொழுது ஒழிவில்லை. ஈஸ்டருக்காக வீட்டை இப்பொழுது சுத்தஞ்செய்ய வேண்டும். அந்தக் கோழியின் முட்டையைச் சாவகாசமாகப் போய் எடுத்துக் கொள்ளுகிறேன்," என்று தனக்குள் நினைத்துக் கொண்டனள். பின்பு அவள் அன்று சாயங்காலத்தில், களஞ்சியத்துக்கு அருகிலிருக்கும் வண்டிப்பெட்டியில் போய் முட்டையைப் பார்த்தனள். அங்கே முட்டை யொன்றுங் காணப்படவில்லை. பிறகு தன் மாமனார், மைத்துனர் முதலிய எல்லோரையும் அதைப் பற்றிக் கேட்டாள். தாங்கள் அதை எடுக்க வில்லையென்று அவர்கள் உரைத்தனர். ஆனால், 'டாராஸ்' என்னும் கடைசி மைத்துனன், "நமது கோழி அடுத்த வீட்டு முற்றத்தில் முட்டையிட்டது. அது 'க்ளக், க்ளக்' என்று அங்கே

சப்தஞ் செய்ததை நான் கேட்டேன். அதற்குப் பிறகு கோழி வேலியைத் தாண்டிப் பறந்து இங்கே வந்து விட்டது" என்றனன். பிறகு அந்தப்பெண் தன் கோழி யிருக்குமிடத்தைத் தேடிப் பார்க்கையில், அது ஒரு சேவலின் பக்கத்தி லிருக்கும் ஒரு கொம்பின் மீது பாதி கண் மூடி, அரைத் தூக்கத்திலிருந்தது. உடனே அவள் அடுத்த வீட்டுக் காரர்களிடத்திற்குச் சென்றாள்.

அப்பொழுது அவ்வீட்டுக் கிழவி வெளியே வந்து, அவளை நோக்கி, "நல்லது! என்ன சமாசாரம்?" என்று கேட்டாள்.

அதற்கு அவள், "என் கோழி இன்று காலை உங்கள் முற்றத்திற்குப் பறந்து வந்தது. பாட்டி! இங்கே எங்கேயாவது அது முட்டையிட்டிருக்கிறதா என்று பார்க்க வந்தேன்" என்றனள்.

"நாங்கள் உன் கோழியைப் பார்க்கவே யில்லை. எங்கள் வீட்டுக் கோழிகளே வெகு காலமாக முட்டையிட்டு வருகின்றன. எங்கள் வீட்டு முட்டைகளே எங்களுக்குப் போதும். பிறர் வீட்டு முட்டைகள் எங்களுக்குத் தேவையில்லை. பிறர் வீட்டு முட்டைகளை நாங்கள் பிச்சையெடுக்கிற வழக்கமில்லை," என்றாள் கிழவி.

இம்மொழிகள் அவளை வருத்தப் படுத்தின. அதனால், அவளும் கொடுஞ்சொற்கள் மொழிந்தனள். கிழவியும் பதிலுக்குப் பதில் கூறினள். இவ்வாறு ஒருவரை யொருவர் வையத் தலைப்பட்டனர். இங்ஙன மிருக்கையில், ஐவானின் மனைவி தண்ணீர் தூக்கிக்கொண்டு அவ்வழியே போகையில், அவர்கள் இருவருக்கும் நடக்கும் சச்சரவைக் கண்டு தானும் அதிற்கலந்து கொண்டனள். இதற்குள், கேப்ரியலின் மனைவி வெளியே வந்து கோபம் மூண்டு இதற்கு முன் நடந்தவைகளையும், நடக்காதவைகளையும் ஞாபகப்படுத்திக் கொண்டு அவர்களைத் தூற்றினள். சண்டை மேலும்

மேலும் அதிகரிக்கவே, பெண்கள் எல்லோரும் ஒருவரைவிட வொருவர் அதிக வார்த்தைகளைக் கொட்டினர். அவர்கள் பேசிய வார்த்தைகள் எல்லாம் தீமொழிகளே.

"நீ இதைச் செய்தாய்; நீ அதைச் செய்தாய்—நீ பெரிய திருடி—நீ கழுதை—நீ முண்டை—நீ உன் கிழமாமனுருக்கு ஆகாரம் கொடுக்காது பட்டினி போடுகிறாய்..." என்றாள் ஒருத்தி.

"நீ தான் பிச்சைக்காரி—நீ என் சல்லடையைத் திருடினாய்—நீ தான் எங்கள் வீட்டு நுகத்தடியைத் திருடினாய்—எல்லாவற்றையும் இப்பொழுதே திருப்பிக் கொடுத்து விட்டு மறு காரியம் பார்," என்று பலவாருகப் பழிக்கலானாள் இன்னொருத்தி.

பின்பு அவர்கள் இருவரும் ஒரு நுகத்தடியைப் பிடித்து இழுத்து அது தங்கள் தங்களுடையது என்று சண்டை செய்தனர்; ஒருவர் மீது ஒருவர் தண்ணீரைக் கொட்டினர். ஒருவர் உடையை ஒருவர் பிடித்திழுத்துக் கிழித்தனர். கடைசியில் ஒருவரையொருவர் அடித்தனர். வயலிலிருந்து அப்போதுதான் திரும்பி வந்த கேப்ரியல் தன் மனைவிக்கு உதவி புரியப் பிரவேசித்தனன். பிறகு, ஐவானும் அவன் குமாரனும் அங்கே வந்தனர். உடனே அவர்கள் எல்லோரும் ஒருகுவியலாகப் புரண்டனர். ஐவான் திடமமைந்தவனானதால் எல்லோரையும் அப்புறமும் இப்புறமும் தள்ளிவிட்டு, கேப்ரியலின் தாடியைப் பிடித்திழுக்கவே அவன் தாடி ரோமங்கள் அவன் கையில் சிக்கி வந்து விட்டன. பிறகு மற்ற ஜனங்கள் அங்கே வந்து வெகு சிரமத்துடன் அவர்களை விலக்கினர்.

இவ்வாறு அவர்கள் இருவருக்கும் மனஸ்தாபம் சம்பவித்தது. கேப்ரியல் தன் தாடி மயிரை ஒரு காகிதத்தில் சுருட்டி வைத்துக் கொண்டு, ஜில்லா கோர்ட்டில் பிராது கொடுத்து விட்டான்.

"ஐவான் பிடுங்கிச் சந்தோஷப் படுகிறதற்கா நான் என் தாடியை வளர்த்தேன்? அவனைச் சும்மா விட்டு விடுகிறதா? இருக்கட்டும்!" என்று உறுமினன்.

அவனுடைய மனைவி அந்த ஊரிலுள்ள எல்லோரிடத்திலும், "ஐவான் தண்டனை விதிக்கப் பட்டு ஸைபீரியாவுக்கு அனுப்பப்படப் போகிருன்," என்று சொல்லினள். இங்ஙனம் இரண்டு திறத்தாருக்கும் விரோதம் முற்றியது.

கிழவர் படுத்த படுக்கையிலிருந்து, "இச்சச்சரவுகள் வேண்டாம்" என்று ஆரம்பத்திலேயே முறையிட்டனர். ஆனல், அவர் மொழிகளை இவர்கள் சிறிதும் செவியுருதிருந்தனர். "குழந்தைகளே! நீங்கள் செய்கிறதெல்லாம் மிகவும் மூடத்தனமான காரியம். ஒன்று மில்லாக் காரியத்திற்குப் பெரிய சண்டை செய்கிறீர்கள். நீங்கள் நன்ருக யோசித்தால் ஓர் அற்பக் கோழிமுட்டையின் நிமித்தம் இவ்வளவு விவகாரங்களும் பெருகி யிருக்கின்றன என்று உங்களுக்கு விளங்கும். ஏதோ குழந்தைகள் முட்டையை எடுத்தார்கள். கடவுள் அவர்களைக் காப்பாற்றுவாராக! ஒரு முட்டையினல் நமக்கு உண்டான நஷ்டமென்ன? கடவுளோ நமக்கு வேண்டியதை அளித்திருக்கிருர். அது இருக்கட்டும். அவர்கள் உங்களை அவமரியாதையாகப் பேசினுர்கள் என்று சொல்லுகிறீர்கள்—நல்லது! அவர்களைத் திருத்தி நல்வழியில் நடக்கக் கற்றுக் கொடுங்கள். நீங்கள் ஒருவரோடொருவர் சச்சரவு செய்து கொண்டு சண்டை போடுகிறீர்கள். அது சுபாவத்தில் நிகழக் கூடியதே; ஏனெனில், மனிதர்கள் பாவிகளே. ஆயினும் இப்பொழுதாவது போய்ச் சமாதானஞ் செய்து கொள்ளுங்கள். இவ்விஷயம் இதனேடு முடியட்டும். இவ்வாறு நடந்து கொள்ளாது மேலும் மேலும் ஒருவரோடொருவர் நடவடிக்கைகள் தொடுத்தால், நீங்கள் இருவரும் இன்னும்

கெட்டுப் போவீர்கள் என்பது நிச்சயம்," என்று அவர் பலவாறு மொழிந்தனர்.

அவர் வார்த்தைகள் வீண்வார்த்தைகள் என்றும், அவர் தள்ளாத காலத்தில் மூடத்தனம் முதிர்ந்து பிதற்றுகிறார் என்றும் எண்ணி, அச் சிறுவர்கள் அவரை அலக்ஷியஞ் செய்தனர்.

ஐவானுக்கு அயலாணிடமிருந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ளச் சிறிதும் இஷ்டமில்லை. "கேப்ரியலின் தாடியை நான் இழுக்கவில்லை. அவனே பிடித்துப் பிய்த்துக் கொண்டான். அவனுடைய குமாரன்தான் என் பொத்தான்களை உடைத்து என் ஷர்டின் பின்புறத்தையும் கிழித்துவிட்டான். இதோ கிழிந்த ஷர்டு மிருக்கிறது," என்று அவனும் கேப்ரியலின் மீது பிரதியாகப் பிராது கொடுத்தான். இந்த வழக்குச் சிறிய கோர்ட்டில் விசாரிக்கப்பட்டபின் பெரிய ஜில்லா கோர்ட்டிலும் விசாரிக்கப்பட்டது. இது நடந்து கொண்டிருக்கையில் கேப்ரியல் வண்டியின் தாழ்ப்பாள் காணுமற் போய் விட்டது. அவன் மனைவி, "ஐவான் குமாரன் தான் அதை எடுத்திருக்க வேண்டும். அவன் நேற்றிரவு வண்டியை நோக்கித் திருட்டுத் தனமாக நடந்து போனதை நாங்கள் ஜன்னல் வழியாய் நன்றாகக் கவனித்தோம். அடுத்த வீட்டுப்பெண் அவன் அதை எடுத்துக் கொண்டு கள்ளுக் கடைக்குப் போனதாகவும், அதை அங்கே விற்க அவன் முயன்றதாகவும் சொன்னாள்," எனக் கூறினள்.

மறுபடியும் அவர்கள் கோர்ட்டுக்குச் சென்றார்கள். அவர்கள் இருவரும் ஒவ்வொரு நாளும் சச்சரவும் சண்டையும் செய்த வண்ண மாயிருந்தார்கள். சில சமயங்களில் அடியுமுண்டு. பெரியவர்களைப் பார்த்துக் குழந்தைகளும் சண்டை போடத் தலைப்பட்டன. துணிகளைத் துவைப்பதற்குப் பெண்கள் ஆற்றங்கரைக்குச் சென்றால், அங்கே

அவர்கள் துணி துவைப்பதை விட்டுவிட்டு, வம்பும் சண்டை யும் வளர்த்திக்கொண்டிருப்பார்.

முதலில் அம்மனிதர்கள் ஒருவர்மேல் ஒருவர் பொய்க் குற்றஞ் சாட்டினர். காலக் கிரமத்தில் சமயம் வாய்த்த காலங்களில் ஒருவர் பொருளை யொருவர் அபகரிக்க வாரம் பித்தனர். அவர்கள் தங்கள் ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக் கும் அவ்வாறே செய்யக் கற்றுக் கொடுத்தனர். அவர்கள் வாழ்க்கை வரவரக் கெட்டுப் போனது. அவர்கள் அடிக்கடி கிராமப் பஞ்சாயத்திலும், சிறிய கோர்ட்டிலும், ஜில்லா கோர்ட்டிலும் ஒருவர் மீது ஒருவர் விடாது வழக்குகள் நடத்தி வந்ததனால், நியாயாதிபதிகளுக்கும் அவர்களிடத்தில் அசூயை பிறந்துவிட்டது. சிலவேளை களில் கேப்ரியலுக்கு அபராதமும் அல்லது ஒன்று இரண்டு நாட்களுக்குச் சிறைவாச தண்டனையும் விதிக் கப் பட்டு வந்தன. சில வேளைகளில் ஐவானும் அவ் வாறே தண்டிக்கப்படுவான். தண்டனை அதிகரிக்க அதி கரிக்க ஒருவர் மீது ஒருவருக்குக் கோபமும், வைரமும் அதிகமாயின. நாய்கள் ஒன்றையொன்று எதிர்க்க எதிர்க்க அவைகளுக்கு ஆவேசமும் உக்கிரமும், அதிகமாகின்றன அல்லவா? ஒரு நாயைப் பின்புறத்தில் அடித்தால், அது தன் முன் நிற்கும் மற்றொரு நாயை மிகுந்த கோபத்துடன் கடிக் கும். அக்குடியானவர்களும் அதே நிலைமையை அடைந் தனர். அவர்களில் எவனாவது ஒருவன் அபராதம் போடப் பட்டாலும் சிறைச்சாலையிலிருக்க வேண்டுமெனத் தண் டனை விதிக்கப்பட்டாலும் உடனே அவனுடைய அகங்கா ரம் அதிகரிக்குமே யொழியக் குறையாது. அதனால் அவன், "சிறிது பொறு. இதற்குத் தகுந்தபடி உனக்கும் கூடிய சீக்கிரத்தில் செய்துவிடுகிறேன்," என்று மிகுந்த கொதிப்புடன் தன்மனத்திற்குள் தீர்மானஞ் செய்து கொள் வான். இங்ஙனம் ஆறு வருஷங்கள் சென்றன.

0142,3MTA,T
N26

படுத்த படுக்கையிலிருக்கும் கிழவர் ஒருவர்தான், "இது வெல்லாம் தகாது, தகாது," என முறையிட்டுக் கொண்டே அதைத் தடுக்க முயலுவர்; "அன்புள்ள மக்களே! என்ன செய்தீர்கள்! உங்கள் சச்சரவுகளை விட்டுவிட்டுச் சொந்தக் காரியங்களைப் பார்க்கமாட்டீர்களா? வீணில் ஏன் ஒருவர் மேல் ஒருவர் துவேஷங் கொள்கிறீர்கள்! கோபம் அதி கரிக்க அதிகரிக்க உங்களுக்குத் தான் மிகுந்த கஷ்டம்; சொந்த காரியங்களைக் கவனியுங்கள்; க்ஷேமத்தை அடை வீர்கள்," என அக்கிழவர் பல முறை கதறுவார். ஆனால், அவர்கள் ஒருவரும் அவர் வார்த்தையைப் பொருட்படுத்த வில்லை.

இதுநிற்க, அந்தக் கிராமத்தில் ஒரு கலியாணம் நடந்தது. அச்சமயத்தில், ஐவானின் மருமகள் பலரும் அறியும்படி கேப்ரியல் குதிரைகளைத் திருடினதாகவும், அதற்காக அவன் பிடிக்கப் பட்டதாகவும் கூறி அவனை அவமானஞ் செய்தாள்.

கேப்ரியல் அச்சமயத்தில் குடித்திருந்ததால், அவன் கோபம் மூண்டு தன்னை மறந்து அவளை ஓங்கி அடிக்கவே, அவள் ஸ்மரணையற்றுக் கீழே விழுந்து ஒருவாரம் வரை யிலும் படுத்த படுக்கையிலேயே கிடந்தாள். இங்ஙனம் சம்பவித்ததனால் ஐவான் மிகுந்த சந்தோஷம் அடைந்தான். ஏனென்றால், அவள் பிரசவகாலம் அதுவே யாகையால் அவன் உடனே நியாயாதிபதியினிடத்தில் பிராது கொடுத் தான். பின்பு அவன், "நான் இந்தத் தடவை அவனைத் தொலைத்துவிட்டேன். இம்முறை அவன் ஸைபீரியா தேசாந்தர சிக்ஷையைத் தப்பித்துக்கொள்ள முடியாது," என எண்ணிக் கொண்டிருந்தான். ஆயினும், இந்த முறை ஐவான் அபஜயமடைந்தான். மாஜிஸ்ட்ரேட் அவன் வழக் கையே அங்கீகரிக்கவில்லை. அந்தப் பெண்ணைப் பரீக்ஷை செய்ததில் காயக்குறிகள் ஒன்றும் காணப்படவில்லை.

பிறகு ஐவான் ஜில்லா கோர்ட்டில் பிராது செய்தான். அச் சமயத்தில் அவன் அங்குள்ள குமாஸ்தாக்களுக்கு லஞ்சம் கொடுத்தும், மேல் உத்யோகஸ்தர்களுக்கு உயர்ந்த பிராந் திகளை அளித்தும், அவர்களைத் தன்வசப்படுத்திக்கொண் டான். அதனால், கேப்ரியலைச் சவுக்கால் இருபது அடிகள் அடிக்கவேண்டுமெனக் கோர்ட்டார் தண்டனை விதித்தனர்.

அப்பொழுது ஐவான், கேப்ரியலுக்கு விதித்த தண் டனையைக் கண்டு களிக்க அவனைப் பார்த்துக் கொண்டிருந் தான். ஆனால், கேப்ரியல் தனக்கு விதித்த தீர்ப்பைக் கடை சிவரையிலும் கேட்டு முகம் வெளுத்து நியாயஸ்தலத்தை விட்டு வெளியே வந்தான். அப்பொழுது ஐவானும் தன் குதிரையினிடம் போக வெளியே வந்தான்.

அச்சமயத்தில், "நல்லது! சேவகன் என் முதுகில் அடிப்பான்; அது என்னை வருத்தும். ஆனால், என் விரோதி யின் பொருள் முழுதும் எரிந்து போகாதிருக்க அவன் ஜாக்கிரதையாய் இருக்கட்டும்" எனக் கேப்ரியல் சொல்லிய வார்த்தைகள் ஐவான் செவியில் விழுந்தன.

உடனே ஐவான் நியாயாதிபதிகளிடஞ் சென்று, "தர்மம் பொருந்திய நியாயாதிபதிகளே! அவன் என் வீட்டைக் கொளுத்தி விடுகிறேன் என்று பயமுறுத்துகிறான். இதற் குப் பலசாக்ஷிகள் இருக்கின்றனர். இதை நீங்கள் கேளுங் கள்," என முறையிட்டனன்.

நியாயாதிபதிகள் திரும்பவும் கேப்ரியலைக் கூப்பிட்டனர். நீ இம்மாதிரி பேசினது வாஸ்தவந்தானா? என்று அவர் கள் அவனைக் கேட்டார்கள்.

"நான் ஒன்றுஞ் சொல்லவில்லை. உங்கள் ஆளுகைக்கு நான் உட்பட்டிருக்கிறேன். என்னை அடியுங்கள். நான் ஒழுங்காக இருந்தும், கஷ்டப்பட நேர்ந்தது. ஆனால், அவன் எது வேண்டுமென்றாலுஞ் செய்யலாம்," என்று சொல்லிப் பின்னும் ஏதோ சொல்ல விரும்பினான்.

அதற்குள் அவன் முகமும் உதடுகளும் விகாரமாகக் காணப்பட்டன. அவன் தன் அருகிலிருந்த சுவரை நோக்கித் திரும்பினன். அப்பொழுது அங்கிருந்தவர்கள் அவன் முகத்தைக் காணப் பயந்ததன்றி, உண்மையில் அவன் ஐவானுக்கும் தமக்கும் தீமை செய்வானென்றே நம்பினர்.

அப்பொழுது வயது முதிர்ந்த நீதிபதி ஒருவர், "சிநேகிதர்களே! என் புத்திமதியைக் கேளுங்கள். நீங்கள் இருவரும் சமாதானத்திற்கு வந்து விடுங்கள். கேப்ரியல்! நீ கர்ப்பஸ்திரீயை அடித்தாயே! அது உனக்கு நியாயம் என்று தோன்றுகிறதா? ஏதோ அவள் கடவுள் அருளால் பிழைத்தனள். இல்லாவிடில், உனக்கு எவ்வளவு பெரும் பாபம் சம்பவித்திருக்கும்? ஆகையால், நீ உன் பிடிவாதத்தை விட்டு அவளை மன்னிப்புக் கேட்டுக்கொள். அவளும் உன்னை மன்னித்து விடுவாள். நாங்களும் தீர்ப்பை மாற்றி விடுகிறோம்," என்றனர்.

குமாஸ்தா இவர் வார்த்தைகளைக் கேட்டு, "இந்த வழக்கின் சம்பந்தமாய் 117-வது சட்டப் பிரகாரம் வாதிப் பிரதிவாதிகள் தாங்களே சமாதானமாய் விடுதல் இயலாது. ஆகையால் தீர்ப்பை நிறைவேற்றியே தீரவேண்டும்" என்றனன்.

உடனே அங்கிருந்த வயது சென்ற நியாயாதிபதி அவனை நோக்கி, "என்ன பிதற்றுகிறாய்? கடவுளுக்குப் பயந்து எல்லோரும் நண்புடனும், ஒற்றுமையுடனும் வாழவேண்டு மென்பதே எல்லாச் சட்டங்களினும் மேலான சட்டமாம்," என்று எடுத்துக்காட்டி அவ்விரு குடியானவர்களுக்கும் பலவாறாக நீதிகளைக் கூறிச் சமாதானஞ் செய்ய முயலுகையில், கேப்ரியல், "எனக்கு இப்பொழுது ஏறக்குறைய ஐம்பது வயது ஆகின்றது. எனக்குக் கலியாணமான ஒரு குமாரனிருக்கிறான். என் ஆயுட் காலத்தில் இது வரையிலும் நான்

அடிக்கப் படவில்லை. இப்பொழுது எனக்கு ஐவான்—அவன் நாசமாகப் போக—அவன் என்னை இந்த அவமானத்திற்காளாக்கினன். நானு அவனை மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறது! நல்லது! இருக்கட்டும். .அவன் என்னை மறக்காதிருக்கச்-செய்கிறேன்," என்று சொல்லி அதற்கு மேல் பேச முடியாமல், திரும்பி வெளியே போய்விட்டான்.

அவர்கள் குடியிருந்த கிராமம் கோர்ட்டிலிருந்து ஏழு மைல் தூரத்திலிருந்தது. ஐவான் வீட்டிற்குத் திரும்பும் போது வெகுநேரம் ஆய்விட்டது. பெண்கள் ஆடுமாடுகளை ஓட்டிவரச் சென்றிருந்தனர். ஆகையால், ஐவான் குதிரையை அவிழ்த்துக் கட்டவேண்டிய விடத்தில் கட்டி, மற்றவைகளைச் சரி செய்து குடிசைக்குட் சென்றனன். உள்ளே ஒருவருமில்லை. குழந்தைகள் கூட வயலினின்று திரும்பவில்லை. பெஞ்சியின் மீது உட்கார்ந்தான். தீர்ப்பு வாசிக்கப் பட்ட பொழுது கேப்ரியல் முகம் வெளுத்ததும், அவன் பயங்கரமான முகத் துடன் சுவரை நோக்கித் திரும்பினதும் அவன் மனத்தில் நன்ருக ஞாபகத்திற்கு வந்தன. உடனே அவன் இதயம் துடித்தது. தான் கேப்ரியலைப் போல் சிக்ஷிக்கப்பட்டால், தன் மனம் எவ்வாறு வருந்தும் என அவன் நினைத்து கேப்ரியலுக்காக வருத்தப்பட்டான்.

அப்பொழுது அவன் தகப்பனுர் இருமிக்கொண்டே, மெதுவாக நகர்ந்து தட்டுத் தடுமாறிக்கொண்டு பெஞ்சியின் அருகில் வந்து உட்கார்ந்தார். அங்ஙனம் வந்தது அவருக்கு மிகுந்த ஆயாசமாய் இருந்தது. அவர் சிறிது நேரம் விடாது இருமிக் கடைசியில் நிதானமடைந்த பின்னர் மேஜையின் மீது சாய்ந்துகொண்ட வண்ணமாகத் தம்முடைய குமாரனை நோக்கி, "நல்லது! அவனுக்குத் தண்டனையாய் விட்டதா?" என வினவினர்.

"ஆஹா! சவுக்கால் இருபது அடி," என ஐவான் பகர்ந்தான்.

அதற்குக் கிழவர் தலையை அசைத்து, "ஐவான்! நீ மிகுந்த தீமை விளைக்கிறாய்—அது அவனுக்கல்ல; உனக்கே யாகும்; நல்லது! அவர்கள் அவனை அடிக்கிறார்கள்; அதனால் உனக்கு எவ்வளவு ஆனந்தம் அதிகரிக்கிறது?" என வினவினார்.

"அவன் மறுபடியும் இம்மாதிரிச் செய்கைகளைச் செய்ய மாட்டான்." என்றான் ஐவான்.

"என்ன செய்யமாட்டான்? நீ செய்ததை விட அவன் என்ன கெடுதல் செய்துவிட்டான்?" என்றார் கிழவர்.

ஐவான் மிகுந்த கோபங்கொண்டு, "என்ன செய்து விட்டானென்று கேட்கிறீர்? அப் பெண்ணைக் குற்றுயிராக அடித்துவிட்டானே? அதுவுமன்றி நம்முடைய வீட்டிற்கு நெருப்பு வைக்கப் போகிறதாகவும் பயமுறுத்துகிறானே? இதற்காகவா அவனிடம் சென்று அவனுக்கு வந்தனமளிக்க வேண்டும்?" என மொழிந்தனன்.

உடனே கிழவர் பெருமூச்சு விட்டு, "அப்பா! நீ எப்போதும் வெளியிலேயே திரிகிறாய். நான் ஏழு வருஷங்களாக அடுப்பங் கரையிலேயே படுத்துக்கிடக்கிறேன். அதனால் உனக்கு எல்லாம் தெரியுமென்றும் எனக்கு ஒன்றும் தெரியாதென்றும் நீ எண்ணுகிறாய். அது தவறு. என் குமாரனே! உண்மையில் உன் கண் துவேஷத்தினால் மூடப்பட்டிருப்பதால், உனக்கு ஒன்றும் தெரியவில்லை. பிறர் குற்றங்கள் உனக்குப் புலனாகின்றனவே யொழிய உன் குற்றங்கள் உனக்குப் புலப்படவில்லை. நீ அவன் தான் குற்றஞ் செய்கிறானென்கிறாய்; அவன் ஒவருன் மாத்திரம் தவறி நடந்தால் உலகத்தில் தீமையே இராது; இருவர் கைக்கொட்டினாலொழிய சப்தம் உண்டாகுமா? நீ அவன் தவறுகளைப் பார்க்கிறாயே யொழிய, உன் குற்றங்களைச் சிறிதும் கவனிப்பதில்லை. அவன் தாடியை இழுத்தது யார்? அவன் வைக்

கோலைத் திருடியது யார்? அவனைக் கச்சேரிக்கு இழுத்தது யார்? இவைகள் எல்லாவற்றிற்கும் நீயே ஆதிகாரணமாக விருக்க, இப்பொழுது நீ எல்லாவற்றையும் அவன் மேல் சுமத்துகிறாய். நீ நடக்கும் வழியே தவறு. உன்னால்தான் எல்லாத் தீமைகளும் விளைகின்றன. நான் ஒரு நாளும் அங்ஙனம் நடந்து கொள்ளவில்லை. அவ்வாறு நடந்து கொள்ள உனக்குக் கற்பிக்கவுமில்லை. நானும் கேப்ரியல் தகப்பனாரும் இப்படிச் சச்சரவு செய்து கொண்டு வந்தோமென்று எண்ணுகிறாயா? நல்லவர்கள் எங்ஙனம் நடந்து கொள்ளுவார்களோ அங்ஙனமே நாங்கள் இருவரும் நடந்து வந்தோம்.

அவன் வீட்டில் மாவு ஆய்விட்டால் அவன் மனைவி இங்கே வந்து, “மாமா! கொஞ்சம் மாவு வேண்டும்” என்று கேட்பாள். “நல்லது! அதோ அந்த மூட்டையில் வைத்திருக்கிறேன்; வேண்டியதை எடுத்துக்கொண்டு போ, அம்மா!” என்று நான்சொல்லுவேன். அவன் குதிரைகளோடு போகிறதற்கு ஆள் ஒருவரும் இல்லாவிடில், “ஐவான்! நீ போய் வா” என்று உன்னை அனுப்புவேன். எனக்கு ஏதாவது தேவையாக விருந்தால் அவனிடஞ்சென்று, “இது வேண்டும், அது வேண்டும்” என்று கேட்பேன். அவனும் மிகுந்த அன்புடன் கேட்டவைகளைத் தடையின்றிக் கொடுப்பான். எங்கள் காலத்தில் நாங்கள் இவ்வாறு நடந்துகொண்டோம். நீங்களும் எங்களைப் போல் சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் நடந்து வந்திருக்கலாம். ஆனால், நீ எவ்வாறு நடந்து வருகிறாய் என்று ஆலோசனை செய். அன்றைய தினம் ஒரு யுத்தவீரன் ப்ளீனா யுத்தத்தைப் பற்றியும் அதன் கொடுமைகளைப் பற்றியும் பேசினான். உன் நடக்கை அதனிலும் கேடாகவிருக்கிறது. அது உண்மையான வாழ்க்கையா? பாவமல்லவா? நீயோ வீட்டிற்கு எஜமானனாக விருக்கிறாய். உன் ஸ்திரீகளுக்கும் குழந்தை

களுக்கும் நீ என்ன கற்பித்திருக்கிறாய் என்று உன்னை யாராவது கேட்டால் நீ என்ன சொல்லுவாய்? சண்டை போடுகிறதற்கும் ஒருவரை யொருவர் ஜன்மப்பகை செய்து கொள்ளுகிறதற்கும் கற்றுக்கொடுத் திருக்கிறேன் என்று சொல்லுவாய் போலும்.

இரண்டு நாட்களுக்கு முன் உன் பையனும் பெண்ணும் ஒருவரோடொருவர் சண்டை செய்துகொண்டும் ஒருவரை யொருவர் சத்தியஞ் செய்து திட்டிக்கொண்டு மிருக் கிறதை அவர்கள் தாய் பார்த்து மிகுந்த களிப்புக் கொண்டு நகைக்கலானாள். இதெல்லாம் நன்றாக விருக் கிறதா? இவைகளுக்கு நீயே காரணமல்லவா? உன் ஆத்மாவைப் பற்றி நீ சிறிது சிந்தை செய். நீ ஒரு வார்த் தை சொன்னால், அதற்கு நான் இரண்டு வார்த்தைகள் பதில் சொல்லி வாக்கு வாதஞ் செய்கிறதும் உன்னைத் திருப்பி முதுகில் அடிக்கிறதும், அழகாகுமா? அது சரி யல்ல. குமாரனே! பூமியில் அவதரித்த கிறிஸ்து அங்ஙனம் நடந்து கொள்ளும்படி நமக்குக் கற்றுக் கொடுக்கவில்லை. 'உன்னை யாராகிலும் திட்டினால், பதில் சொல்லாதே; அவன் மனச்சாக்ஷியே அவனைத் தண்டிக்கும்' என்று அவர் சொல்லியிருக்கிறார். தவிர, 'ஒருவன் உன்னை உன்கன்னத்தில் அறைந்தால் நீ மற்றொரு கன்னத்தையும் காண்பி' என்றார். அதன் உட்கருத்தென்ன? "நான் தண்டிக்கப் பட வேண்டியது நியாயமானால், என்னைத் தண்டனை செய்" என்பது உட்பொருளல்லவா? அதனால், அவன் மனச் சாக்ஷியே அவனுடன் போராடி அவனைச் சாந்தப்படுத்தி அவனுக்கு உன்னிடம் நட்பை உண்டுபண்ணும் என்பது அவர் மனக்கருத்தல்லவா? இதன்றி, ஒருவரோடொருவர் சண்டைபோடும்படி அவர் கற்றுக்கொடுத்திருக்கிறாரா? நல்லது! ஏன் பேசாதிருக்கிறாய்? நான் சொல்லுவது சரியா அல்லவா?" என்றார் கிழவர்.

ஐவான் இவைகளைச் செவியுற்று மௌனமாகவிருந்தான். கிழவர் ஒரு முறை இருமி பெருமூச்சுவிட்ட பின் மறுபடியும் அவர் பேச வாரம்பித்தார்: "கிறிஸ்து நமது கெடுதிக்காக இவைகளைக் கற்றுக் கொடுத்தார் என்று எண்ணுகிறாயா? ஒரு நாளுமில்லை. எல்லாம் நமதுக்ஷேமத்திற்காகவே அவர் செய்திருக்கிறார். உன்னுடைய இல்வாழ்க்கையை ஆலோசித்துப் பார். நீ அவனுடன் சச்சரவுக்கு ஆரம்பித்தது முதல், நீ மேன்மை அடைந்து வருகிறாயா? அல்லது தாழ்வடைந்து வருகிறாயா? என்று கவனி. நீ வியாஜ்ஜியத்திற்காகச் செலவழித்த பணத்தைக் கணக்கிட்டுப் பார். ஆகாரத்திற்கும் பிரயாணத்திற்கும் இதர செலவுகளுக்கும் எவ்வளவு பணம் ஆய்விட்டன என்று பார். உன் குமாரர்கள் பெரியவர்களாக வளர்ந்து வருகிறார்கள். நீ அவர்கள் க்ஷேமத்தைச் சிறிதும் பாராட்டாது, உன்பொருளை யெல்லாம் வீண் செலவு செய்து வருகிறாய். எல்லாவற்றிற்கும் உன் கர்வமே காரணம். இப்பொழுது நீ உன் குமாரர்களுடன் வயலை உழுது கொண்டும், விதை விதைத்துக் கொண்டும் இருக்கவேண்டியது போய், உன் விரோதிக்குத் தீங்கிழைப்பதற்காக வக்கீல்கள் இடத்திற்கும், மாஜிஸ்ட்ரேடின் இடத்திற்கும் சென்று வருகிறாய். தக்க காலத்தில் உழுது விதைத்தாலல்லவா பூமி பலன் தரும். 'ஓட்' தானிய சாகுபடி ஏன் கெட்டிருக்கிறது? அவைகளை எப்பொழுது நீ விதைத்தாய்? பட்டணத்திலிருந்து எப்பொழுது நீ திரும்பினாய்? உன் கோர்ட்டு விவகாரங்களால் உனக்கு வந்த பலன்கள் என்ன? உன் கொதிப்பை அதிகப்படுத்திக் கொண்டாய். உன் குமாரர்களுடன் உன் வேலைகளைச் செய்து கொண்டும், வயல்களை உழுது கொண்டும், வீட்டு வேலைகளைச் சரிவரப் பார்த்துக் கொண்டும், உன்னைக் கோபித்துக் கொள்ளுகிறவர்களைக் கடவுளுக்குப் பயந்து மன்னித்தும் நடந்து வரக்கூடாதா? அப்படிச்

செய்தால் உன் வேலையை நன்றாகக் கவனிக்கிறதற்கும் உன் ஆத்மா திருப்தியோடிருக்கிறதற்கும் அதிக அவகாசம் இருக்குமே?" என்றார் கிழவர்.

ஐவான் மௌனமாக விருந்தான்.

"குமாரனே! நானே கிழவன். என் வார்த்தையைக் கேள். குதிரையைக் கட்டிக் கொண்டு இப்பொழுதே கோர்டிற்குச் சென்று ஒரு நிமிஷங்கூட தாமதிக்காமல் எல்லாவற்றையும் நிறுத்திவிடு. நாளை காலை கேப்ரியலிடஞ் சென்று அவனுடன் சமாதானஞ் செய்து கொள். நாளை விடுமுறை நாளாக விருக்கிறதினால், அவனை இங்கே அழைத்து வந்து, 'டீ' சாராயம், முதலியவைகளை அவனுக்குக் கொடுத்து உபசரித்து அவன் மனஸ்தாபங்களை ஒழித்து விடு. இனி மனஸ்தாபங்களை வைத்துக் கொள்ளக் கூடாதென்று நீ தீர்மானஞ் செய்து கொள்வது மாத்திரமல்லாமல், உன் வீட்டுப் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் சொல்லிவிடு," என்று கிழவர் மேலும் பகர்ந்தார்.

ஐவான் பெரு மூச்சுவிட்டு, கிழவர் சொல்லுகிறது உண்மையே என எண்ணினான். அவன் மனத்திலிருந்த கவலை ஒருவாறு குறைந்தது. ஆயினும், கேப்ரியலுடன் எங்ஙனம் சமாதானஞ் செய்து கொள்ளுகிறதென்றும், விவகாரங்களை எங்ஙனம் முடிவு செய்து கொள்ளுகிறதென்றும் அவனுக்குப் புலப்படவில்லை.

மீண்டும் அக்கிழவர் அவனுடைய எண்ணங்களை ஊகித்து, "ஐவான்! இப்பொழுதே கேப்ரியலிடம் போ; இனி ஒரு நிமிஷங்கூடக் காலதாமதஞ் செய்யாதே. நெருப்பை ஆரம்பத்திலேயே அணைத்து விடு. இல்லாவிடில், அது நம்முடைய சக்திக்கு மிஞ்சிப் போய், எங்கும் பரவி விடும்." என்று அவனை அவசரப்படுத்தினார்.

அவர் இன்னும் ஏதோ பேச விரும்பி யிருந்தார். ஆனால், அங்குள்ள ஸ்திரீகள் ஆரவாரஞ் செய்துகொண்டு அறைக்

குள் நுழைந்ததனால், அவர் மேலே பேசமுடியாமற் போய் விட்டது. கேப்ரியலுக்குச் சவுக்கடி தண்டனை விதிக்கப் பட்டதையும், அவன் ஐவான் வீட்டிற்கு நெருப்பு வைப்ப தாகப் பயமுறுத்தினதையும் இவர்களும் செவியுற்றிருந்தார் கள். தாங்கள் தெரிந்து கொண்ட விஷயங்களுடன் வேறு பல விஷயங்களையும் சேர்த்துக்கொண்டு கேப்ரியல் வீட்டு ஸ்திரீகளுடன் அவர்கள் சண்டை செய்தார்கள். கேப்ரிய லின் மருமகள் இவர்கள் மீது கிரிமினல் வியாஜ்ஜியம் தொடுப்பதாகப் பயமுறுத்துகிறாளென்றும், மாஜிஸ்ட்ரேட் கேப்ரியலுக்கு அனுகூலமானவர் என்றும் ஆகையால் வியவ காரத்தை அவர் அவனுக்குச் சார்பாகத் திருப்புவாரென்றும் அங்குள்ள உபாத்தியாயர் ஒருவர் உதவியைக்கொண்டு, கேப்ரியல் எல்லாவற்றையும் விபரமாகக் காட்டிச் சக்கர வர்த்திக்கு ஒரு மனு எழுதியிருக்கிறானென்றும், ஐவானின் நிலங்களில் பாதி கேப்ரியலுக்குக் கொடுக்கப்படும் என்றும் அவ்வூரிலுள்ளவர்கள் பேசிக்கொண்டிருக்கிறதாக இவர்கள் கூறினர்.

ஐவான் இந்த மொழிகளைக் கேட்டுக் கடின சித்தனாகிக் கேப்ரியலுடன் சமாதானஞ் செய்துகொள்ளும் எண்ணத் தை ஒழித்தனன்.

ஐவான் ஒருவனே எல்லாவற்றையும் கவனிக்க வேண்டி யிருந்தது. அவன் ஸ்திரீகளுடன் அதிகமாகப் பேசிக் கொண்டிருக்க விரும்பாமல், தன் அறையைவிட்டு வெளியே வந்து கொல்லையிலுள்ள கொடிகளைச் சுற்றிப் பார்த்தான்; பின்பு முற்றத்திற்குத் திரும்பி வந்தான். சூரியன் அஸ்தமிக் கும் நேரமாய் விட்டது. சிறுமிகள் புலங்களிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். எவ்வளவு தூரம் விதைகள் விதைக்கப்பட்டனவென்று ஐவான் அவர்களை விசாரித்தான். பிறகு கொட்டகைக்குட் புகுந்து, சில கழிகளைச் சீர் செய்ய வாரம்பித்தான். இருட்டிப் போய்விட்டதால், அவைகளை

மறுநாள் செய்து கொள்ளலாமெனத் தீர்மானித்து, ஆடு மாடுகளுக்குப் புல் முதலியவைகளைப் போட்டுவிட்டுக் குதிரைகளை அழைத்து வருகிற பையனுக்குக் கதவைத் திறந்துவிட்டுக் கடைசியில் தாளிட்டுச் சாப்பிட்டுத் தூங்கவேண்டியது தான் என்று எண்ணிக் குடிசைக்குட் புகுந்தான். அவன் தன் குடிசையின் கதவின் சங்கிலியின் மீது கையை வைத்துக்கொண்டு நிற்கையில், "அவன் நாசமாகப் போகவேண்டும்; அவனைக் கொன்றாலும் தோஷமில்லை," என்று கோபத்துடன் உரக்கச் சாபம் இட்டுக்கொண்டிருக்கும் அயலானின் மொழி அவன் செவியில் விழுந்தது. இம் மொழிகளைக் கேட்டதும், ஐவானுக்கு அதிக கோபம் மூண்டது. அவன் சற்று நின்று,கேப்ரியல் மொழியும் சபத வார்த்தைகளைச் செவியுற்றுப் பின்னர் தலையை அசைத்துக் குடிசைக்குட் சென்றான். அறையில் ஒரு தீபம் எரிந்து கொண்டிருந்தது; அவன் மருமகள் ஒரு மூலையில் நூல்நூற்றுக் கொண்டிருந்தாள். அவன் மனைவி இராப் போஜனம் தயார் செய்து கொண்டிருந்தாள்; அவன் மூத்த குமாரன் செருப்புக்களுக்கு மரப்பட்டைகளை இழைத்துக்கொண்டிருந்தான். இரண்டாவது குமாரன் மேஜையின் அருகில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தான்.

முள்போன்ற அவ்வயலான் தன் பக்கத்தில் இல்லாவிடில் ஐவான் சந்தோஷமாகவும் திருப்தியாகவும் இருந்திருப்பான்.

பின்பு ஐவான் மிகுந்த கோபாவேசத்துடன் உள்ளே நுழைந்து பெஞ்சியின் மீதிருந்த பூனையைக் கீழே தள்ளி, தொட்டியைச் சரியானவிடத்தில் வைக்காததற்காக ஸ்திரீகளைத் கோபித்துக்கொண்டு,கிழிந்த குதிரைச் சேணத்தைச் சீர் செய்வதற்காக உட்கார்ந்தான். அவன் மனம் வியாதி பிடித்தவண்ணமாக விருந்தது. கேப்ரியல் என்பவன் கோர்ட்டில் பயமுறுத்தினதும் கம்மின குரலுடன் உரக்க, "நான் அவனைக் கொலை செய்ய விரும்புகிறேன்"

என்று சொன்னதும், அவன் மனத்தைவிட்டு அகலா திருந்தன.

அந்தவீட்டிலுள்ள ஒருகிழவி ஒருசிறு பையனுக்கு இராப் போஜனம் அளித்தாள், அவன் இராப் போஜனஞ் செய்த பிறகு 'நீண்ட கோட்' ஒன்றைத் தரித்துக்கொண்டு ரொட்டியுடன் தெருவில் வந்து குதிரைகளிடம் சென்றான்; மூத்த சகோதரன் அவனுடன் போக எத்தனிக்கையில், ஐவானும் வெளியில் வந்தான்.

அன்றிரவு ஆகாயம் மேகங்களால் மூடப்பட்டு வெகு இருட்டாக விருந்தது. காற்றும் வீசத் தலைப்பட்டது. ஐவான் தன் குதிரைகளை அன்றிரவு புல்லுள்ள மைதானத்திற்கு அழைத்துச் செல்ல உத்தேசித்திருந்ததால், மற்ற வீட்டுச் சிறுவர்களும் குதிரைகளுடன் வந்தார்கள். ஐவான் தன் குமாரனைக் குதிரைமீது ஏற்றியபின், அவர்கள் எல்லோரும் ஒரு சந்தின் வழியாகச் செல்லுவதைக் கண்ணுக்கு எட்டியவரையில், அவன் கவனித்த வண்ணமாகவே இருந்தான். "உன் வஸ்துக்கள் எரிந்துபோகும்; ஜாக்கிரதை!" என்று கேப்ரியல் கூறிய மொழிகள் அப்பொழுது தான் மொழிந்தவை போல் ஒலித்துக்கொண்டிருந்தன.

பின்பு ஐவான், "அக்கொடியவன் பின்னால் எது சம்பவிக்குமோவென்று சிறிதும் இலக்ஷியஞ் செய்யான். இப்பொழுது காற்று வீசுகிறது; எல்லாம் காய்ந்து கிடக்கின்றன. அவன் கொல்லையின் வழியாக நுழைந்து காய்ந்து கிடக்கும் எவைகளுக்காவது நெருப்பை வைத்துவிட்டால், எல்லாம் எரிந்து விடும். அவன்தான் அதைச் செய்தானென்று நிரூபிக்க ஒருவராலும் முடியாது. நான் அவனைப் பிடித்துவிட்டால், அவனை இலகுவில் போகவிடமாட்டேன்." என்று ஆலோசித்தவனாய்த் தன் வீட்டிற்குட் போகாது தெருவில் நின்று, 'அவன் என்னதான் செய்ய மாட்டான்? வீட்டைச்சுற்றிப் பார்ப்பதே நல்லது," என்று தீர்மானஞ்

செய்து, மெதுவாக 'கேட்'வாசல் வழி நுழைந்து ஒருமூலை யில் திரும்புகையில், சற்றுத் தூரத்தில் வேலியின் பக்கத்தில் யாரோ ஒருவர் நகருவது போலும் மறைவது போலும் திடீரென்று காணப்பட்டது. ஐவான் அங்கேயே நின்று, மெதுவாக அவ்விருட்டில் 'உற்றுப் பார்த்தான். இலைகளும் வைக்கோலும் காற்றில் அலைவதால் உண்டாகும் சப் தத்தைத் தவிர எல்லாம் அமைதியாகவே யிருந்தன. முத லில் இருளால், ஐவான் கண்ணிற்கு ஒன்றும் புலனுகா திருந்த போதிலும், பின்பு சிறிது நேரம் இருட்டி லேயே உற்றுப் பார்த்ததனுல், தூரத்தில் இருக்கும் வேலி யும் அதில் திறந்திருக்கும் வழியும் கலப்பையும் ஒருவாறு புலனுயின. ஆயினும், அவன் அங்கேயே நின்று கவனித்த தால், வேறொன்றுங் காணப்படவில்லை.

" ஒன்று மிருக்காதென்று எண்ணுகிறேன். ஆயினும் ஒருமுறை சுற்றிப் பார்க்கிறதே நல்லது," என்று அவன் மறுபடியும் தனக்குள் எண்ணிக்கொண்டு, தன் அடிச் சப்தம் தன் காதுகளுக்கும் கேளாத வண்ணம் அவ் வளவு மெதுவாக நடந்தான். அவன் ஒரு மூலையைச் சேர்ந்ததும், சற்றுத் தூரத்தில் தோன்றின கலப்பையின் பக்கத்தில் ஏதோ ஒன்று பளிச்செனத் தோன்றி ஒரு நிமிஷத்திற்குள் மறைந்தது.

ஐவானின் இதயம் அடிக்காது நின்றதுபோல் காணப் பட்டது. சுவாசமும் இல்லாமல் இருந்தது. அதே இடத் தில் முன்னிலும் அதிகமாய்ப பளிச்சென்ற ஜோதி தெரிந் தது. அவ்வெளிச்சத்தில் எவனே ஒருவன் குனிந்து பதுங் கிச் சென்று, ஒரு கற்றை வைக்கோலைக் கொண்டு நெருப்பு மூட்டுவது அவன் கண்ணிற்கு நன்றுகப் புலனுயிற்று. அதைக் கண்டதும் ஐவானின் இதயம் பக்ஷியின் இறகுகள் போல் பட படவென்று அடித்தது. உடனே அவன் மிகவும் வேகமாய் அங்கு ஓடினன். "இச்சமயம்

அவன் என்னைத் தப்பித்துச் செல்ல வியலாது. அவனைக் கையோடு பிடித்து விடுகிறேன்,'' என்று தனக்குள் எண்ணிக் கொண்டான். அதற்குள், தீ நன்றாகப் பற்றி வைக்கோல் போர், 'திகு திகு' என்று எரிய வாரம்பித்து விட்டது. நொண்டி கேப்ரியல் அங்கு நிற்பதும் அவன் கண்ணிற்கு நன்றாகத் தெரிந்தது.

அவன் "இம்முறை உன்னைக் கட்டி விடுகிறேன்,'' என்று சொல்லிக் கொண்டே ஓநாய் ஆட்டின் மீது பாய்வது போல், அவன் மீது பாய்ந்து சென்றான். ஆனால், நொண்டி மனிதன் இவன் வருகிற அடிச் சப்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்து இன்னான் வருகிறானென்று தெரிந்து கொண்டு விரைவில் தனக்கு அருகிலிருந்த சுவரின் பக்கத்தில் தாவி ஓடிச் சென்றான்.

ஐவான், "உன்னை விட்டேனா?'' என்று உரக்கக் கத்திக்கொண்டு அவன் மேற் பாய்ந்து அவனுடைய கழுத்துப் பட்டையைப் பிடித்துக் கொண்டான். அவன் அதை ஒரு திமிறு திமிறிக் கொண்டான். அது நழுவவே, இவன் அவனுடைய கோட்டைப் பிடித்தான். அவன் தன் கோட்டுக் கிழியும் வண்ணம் இன்னொரு திமிறு திமிறித் தப்பித்துக் கொண்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடிப்போய் விட்டான். அவன் கோட்டைப் பிடித்து இழுத்த வேகத்தினால் ஐவான் பூமியில் விழுந்து விட்டனன். கேப்ரியல் தப்பித்து ஓடினன். உடனே ஐவான், "திருடனைப் பிடி, திருடனைப் பிடி,'' என்று கதறிக்கொண்டு அவனைப் பின் தொடர்ந்தேகினன்.

அதற்குள் கேப்ரியல் தன் வீட்டு முற்றத்தை அடைந்து விட்டான்; இவனும் விடாது அவன் வீட்டு முற்றத்திற்குள் பிரவேசித்து அவனைப் பிடிக்க யத்தனிக்கையில், அவன் தன் சமீபத்திலிருந்த ஒரு மரக் கட்டையால் தனது முழு பலத்துடன் இவன் தலையில் அடித்தான்.

உடனே ஐவான் மூளை கலங்கி, மயக்க மடைந்து, கண்கள் இருண்டு, பூமியில் விழுந்தனன். அவன் பிரக்ஞை வந்து பார்க்கையில் கேப்ரியலைக் காணவில்லை. அவனைச் சுற்றிலும் பகல்போல் வெள்ளிச்சம் தெரிந்தது. பெரிய இரைச்சலும் நெருப்பினால் மூங்கில்கள் பிளவுபடும் சப்தமும் பயங்கரமாக அவன் செவியில் விழுந்தன. தன் பெரிய வைக்கோல் போர் நன்றாக நெருப்புப் பிடித்து எரிவதும் சிறிய வைக்கோல் போரில் நெருப்புப் பற்றிக்கொண்டிருப்பதும், காற்றினால் புகையும், ஜுவாலையும், எரியும் வைக்கோலும், தன் குடிசை பால் எழும்புவதும், அவனுக்கு நன்றாகக் காணப்பட்டன.

அவன் இன்னது செய்வதென்று தோன்றாது "சகோதரர்களே! சகோதரர்களே!" என்று கதறினான். "ஐயோ! நான் முதலிலேயே வைக்கோலைப் பிடித்திழுத்து அணைத்திருக்கலாமே! ஏன் அவ்வாறு செய்யாது இருந்துவிட்டேன்!" என்று சிந்தித்தான். அவன் இருதயம் படபடவென்று அடித்தது. அவன் கூக்குரலிட விரும்பியும், அவன் குரல் எழும்பவில்லை. அவன் அங்கு ஓட எத்தனித்தான். ஆனால் கால்கள் நடுக்கங் கொண்டமையால், அவனால் நகர முடியவில்லை. பின்பு அவன் நிதானமாக நடந்து வேலியைச் சுற்றிக்கொண்டு நெருப்பின் சமீபத்தில் போகையில், இரண்டு போர்களும் சுவாலைவிட்டு எரிந்து விட்டதன்றி, வாசலும் குடிசையின் ஒரு மூலையும் எரியத் தலைப்பட்டன. சுவாலை முற்றத்தில் பிரவேசிக்க இடமில்லாமையால், ஜன்னலின்வழியாக வீசிக் கொண்டிருந்தது. ஜனங்கள் ஒன்று கூடிவிட்டனர். ஆனால் அவர்களால் ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. பக்கத்துக் குடியானவர்கள் தங்கள் தங்கள் சாமான்களைத் தெருவிற்குக் கொண்டு வருவதிலும், ஆடுமாடுகளை முற்றங்களை விட்டு வெளியே துரத்துவதிலும், அவசரப்

பட்டுக் கொண்டிருந்தார்கள். விரைவில் கேப்ரியல் வீட்டி லும் நெருப்புப் பிடித்தது. அத்தருணம் காற்று கடுமை யாய் வீசினதால், சுவாலை தெருவெங்கும் பரவினது. அத னல், பாதி கிராமம் 'திகு திகு' வென்று ஜுவாலை விட்டு எரிந்தது.

ஐவானுக்குக் கிழவரைக் காப்பாற்றவும், வீட்டிலுள்ள வர்கள் எல்லோரையும் வெளியில் கொண்டு போகவும் மாத்திரம் தான் அவகாச மிருந்தது. அவன் பொருள் எல் லாம் அழிந்து விட்டன. புலன்களில் மேய்வதற்குச் சென்ற குதிரைகளைத் தவிர ஆடுமாடுகள், கோழிகள், வண்டி கள், கலப்பைகள், ஸ்திரீகளின் பெட்டிகள், சாக்குகளில் காப்பாற்றி வைக்கப்பட்ட தானியங்கள் முதலியன எல் லாம் எரிந்து அழிந்து விட்டன.

கேப்ரியல் புலத்திலுள்ள ஆடுமாடுகள் காப்பாற்றப் பட் டன. வீட்டுச் சாமான்களில் சில பத்திரப் படுத்தப் பட்டன.

அன்றிரவு முழுவதும் நெருப்பு எரிந்த வண்ணமாகவே யிருந்தது. ஐவான் தன் வீட்டின் முன்னின்று சுவாலை யைப் பார்த்துக் கொண்டே, "சகோதரர்களே! நான் உங் களுக்கு என்ன கெடுதி செய்தேன்! நீங்கள் வைக்கோலை இழுத்து நெருப்பை அப்பொழுதே ஏன் அணைத்திருக் கக் கூடாது?" என்று முணுமுணுத்துக் கொண்டே, ஒரு மரக்கட்டையைப் பிடித்திழுக்க வாரம்பித்தான். அப்பொழுது அவன் வீட்டுக் கூரை விழுஞ் சமயமாய் இருந்தது. ஸ்திரீகள் அவனை "அதனருகில் போகக் வேண்டாம்" என்று கூப்பிட்டனர். ஆனல் அவன் அக்கட்டையைப் பிடித்து இழுத்துவிட்டு, மற்றொரு கட்டையைப் பிடித்திழுக்கச் சென்றான். அப்பொழுது அவன் தடுமாறி நெருப்பில் விழப்போக அவன் குமாரர்கள் விரைவாய் ஓடி, அவனைத் தப்புவித்தனர்.

அவன் தலைமயிரும், தாடியும், கைகளும் நெருப்பில் சிறிது எரிந்து போயின. அவன் உடைகளும் கெட்டுப்போயின. அவனுக்கு ஒன்றிலும் உணர்ச்சி யிருப்பதாகக் காணப்பட வில்லை.

"துக்கத்தினல் அவனுக்குச் சித்தப் பிரமையாய்விட்டது," என்று ஜனங்கள் மொழிந்தனர். நெருப்புச் சிறிது குறையத் தலைப்பட்டது. அப்பொழுதும் அவன் அங்கே நின்றுகொண்டு, "அப்பொழுதே பிடித்திழுத்து அணைத்திருக்கவேண்டும்." என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

பொழுது விடியுந்தருணத்தில், கிராமத்தலைவரின் குமாரன் ஐவானிடத்திற்கு வந்து, "மாமா! உங்கள் தகப்பனர் இறக்கும் நிலைமையிலிருக்கிறர். உங்களிடத்தில் கடைசியாக உத்தரவு பெற்றுக்கொள்ள உங்களைக் கூப்பிடுகிறர்," என்றன்.

ஐவானுக்குத் தன் தகப்பனரின் ஞாபகமேயில்லாததனல் அச்சிறுவன் சொல்லுவது ஒன்றும் அவனுக்கு விளங்கவில்லை.

"யார்? என் தகப்பனரா? யாரைக் கூப்பிடுகிறர்?" என்றன் அவன்.

"ஆம்! உங்களுடைய தகப்பனர் கடைசியாக உத்தரவு பெற்றுக்கொள்ள உங்களைக் கூப்பிடுகிறர். அவர் இறக்கும் நிலைமையில் இருக்கிறர். வாருங்கள் மாமா!" என்று அச்சிறுவன் மொழிந்து அவன் கையைப் பிடித்து இழுத்து வந்தான். கிழவரைத் தூக்கிச் சென்றபோது, எரியும் வைக்கோல் அவர் மீது விழுந்து அவர் சரீரத்தைப் புண் படுத்தினது. அக்கிராமத்தில், நெருப்பில் அகப்படாமல் தூரத்திலிருந்த கிராமத்தலைவரின் குடிசையில் அக்கிழவரைக் கொண்டு போய்விட்டிருந்தனர்.

ஐவான் அந்தக் குடிசைக்குச் சென்ற பொழுது, அங்கே

கிழவிகளையும் குழந்தைகளையும் தவிர வேறொருவருமில்லை. எல்லோரும் நெருப்புப் பற்றி எரியும் இடத்திற்குச் சென்றிருந்தனர். ஐவானின் தகப்பனார் தம்முடைய கையில் ஒரு மெழுகுவர்த்தியைப் பிடித்துக்கொண்டு வாயிற்படியைநோக்கிப் பார்த்துக்கொண்டே பெஞ்சியின் மீது படுத்திருந்தார். அவர் குமாரன் வந்த செய்தியை அங்கிருந்த கிழவிகள் அவருக்கு தெரிவித்தார்கள். கிழவர் அவனைச் சமீபத்தில் அழைத்து, "ஐவான்! நான் என்ன சொன்னேன்? கிராமத்தை எரித்தது யார்?" என்று கேட்டார்.

"அவன் தான் அப்பா! அவனைப் பிடித்து விட்டேன். நெருப்பு வைக்கிறதையும் பார்த்தேன். வைக்கோலை அப்பொழுதே நான் அணைத்திருந்தால் ஒன்றும் நடந்திராது" என்றான் ஐவான்.

"ஐவான்! நான் இறக்கும் நிலைமையிலிருக்கிறேன். நீயும் ஒரு நாள் இறப்பாய். இது யார் குற்றம் சொல்லு?" என்றார் கிழவர்.

ஐவான் தன் தகப்பனாரை உற்றுப் பார்த்து, வார்த்தையொன்றும் நாவில் எழாது மௌனமாக விருந்தான்.

"கடவுள் முன்பாக இது யார் குற்றம் என்று சொல்லு. நான் முன்பே என்ன சொல்லி யிருந்தேன்?" என்றார் கிழவர்.

அப்பொழுது தான் ஐவானுக்கு நல்லுணர்வு வந்தது; உடனே அவன் பெரு மூச்சுவிட்டு, "அப்பா! அது என் குற்றமே!" என்று சொல்லி அழுது தன் தகப்பனார் முன் மண்டி போட்டு, "அப்பா! என்னை மன்னித்து விடுங்கள்; உங்கள் முன்னும் கடவுள் முன்னும் நான் பாவத்தை இழைத்து விட்டேன்," என்று விம்மி விம்மி அழுதனன்.

கிழவரின் கை நடுங்கியது; அதனால் அவர் மெழுகு வர்த்தியைத் தமது இடக்கையில் மாற்றிக் கொண்டு வலக்கையில் கிறிஸ்துவின் ஞாபகார்த்தமாகத் தமது நெற்றியில் சிலு

வைக் குறியைச் செய்து கொள்ள முயன்றும், கையில் பல மில்லாததனால் அங்ஙனஞ் செய்யாது, "கடவுளே! காப் பாற்று வீராக!" எனத் தெய்வத்தைத் துதித்தார். பின்னர் அவர் தமது குமாரனை நோக்கி, "ஐவான்! என் வார்த்தை யைக் கேள்" என்றார்.

"அப்படியே, அப்பா!" என்றான் ஐவான்.

"இப்பொழுது என்ன செய்யப் போகிறாய்?" என்றார் கிழவர்.

ஐவான் அழுதுகொண்டே, "அப்பா! எனக்கு இன்னது செய்கிறதென்று தெரியவில்லை," என்றனன்.

கிழவர் தமது கண்களை மூடிக்கொண்டு சிறிது நேர மிருந்து பின்பு தம்மை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு, கண்களைத் திறந்து உதடுகளை அசைத்து, "கடவுள் வழியில் நடந்தால் ஒரு குறைவுமில்லை," என்று சொல்லிச் சிறிது மௌனமாக விருந்து பின்னர்ப் புன்னகை செய்து, "குமா ரனே! நமது வீட்டிற்கு அவன் நெருப்பு வைத்தான் என்று சொல்லாதே. நீ பிறர் குற்றத்தைத் தூற்றாது மன்னித் தால், கடவுள் உன் குற்றத்தையும் மன்னிப்பார்" என்று கூறி, தமது இரு கைகளாலும், மெழுகுவர்த்தியை மார்பின் மீது வைத்து இறுகப் பிடித்துக்கொண்டு பெருமூச்சு விட் டுக் கால்களை நீட்டிப் பரகதி யடைந்தனர்.

பின்பு ஐவான் கேப்ரியலைப்பற்றி ஒருவரிடத்திலும் ஒன் றும் சொல்லவில்லை. நெருப்பு எங்ஙனம் பிடித்தது என்று ஒருவருக்குந் தெரியாது. கேப்ரியல் ஐவான் தன் மீது குற் றஞ் சாட்டாது ஏன் சும்மா விருக்கிறானென்று ஆச்சரியப் பட்டான். முதலில் ஐவானைக் கண்டபோது இருந்த பயம் அவனுக்கு நாளடைவில் குறைந்து விட்டது. பின்பு அவர் கள் குடும்பத்தினரும் சச்சரவின்றி நெருங்கிப் பழக வாரம் பித்தனர். அவர்கள் மனஸ்தாபம் முற்றும் தொலைந்து விட்டது.

அந்தக் கிராமத்தை மீண்டும் புதுப்பித்துக் கட்டுகையில் அந்த இரண்டு குடும்பத்தினரும் ஒரே குடிசையில் வசிக்கத் தலைப்பட்டனர். கிராமத்தை மறுபடியும் விஸ்தாரமாகக் கட்டுகையில் அவர்கள் இருவரும் முன்போலவே, தங்கள் வீடுகளை ஒன்றின் பக்கத்தில் ஒன்றாகக் கட்டிக்கொண்டு இருந்தனர்.

இவர்கள் வயோதிகத் தந்தைகள் எவ்வளவு அன்னி யோன்னிய நண்பர்களாகப் பழகி வாழ்ந்தனரோ அவ் வளவு மனமொத்த நண்பர்களாக இவர்களும் அன்புடன் வாழ்ந்து வந்தனர். ஐவான் கடவுள் அருளின வேத வாக்கி யங்களின் உண்மைகளை எப்பொழுதும் மனத்தில் நினைத்த வண்ணமாகவே யிருந்தான். சிறு நெருப்பாக விருக்கும் பொழுதே நெருப்பை அவித்துவிடல் வேண்டும்; பெரு நெருப்பான பின் அதை அவித்தல் இயலாது என்னும் தத்து வத்தை அவன் நித்தமும் நினைப்பான்.

அது முதல் அவன் தனக்கு எவனாவது தீங்கிழைக்கின், அவனை எதிர்க்காது அத்தீங்கை விலக்க முயலுவான். தவிர, எவனாவது தன்னைத் தூற்றினால், தான் அவனை எதிர்த்துத் தூற்றாது, அவனை நல்வழியில் திருப்பப் பாடுபடுவான். தன் வீட்டுப் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும், அவன் அவ் வாறே கற்பித்தான். அதனால் அவன் வாழ்க்கை மேன் மை அடைந்தது. முன்போல் அவன் மீண்டும் உயர்ந்த நிலைமையை அடைந்தனன்.

59491

---

PRINTED AT THE HUXLEY PRESS, MADRAS

O142,3MTA,J
N26

## எமது இதர பிரசுரங்கள்

பஞ்ச தந்திரம் :—(படங்களுடன்)

| | | | |
|---|---|---|---|
| மித்திர பேதம் | ... | அணா | 5 |
| சுகிர்ல்லாபம் | ... | ,, | ,, |
| சந்தி விக்கிரகம் | ... | ,, | ,, |
| லப்த ஹானி, அசம்பிரேக்ஷிய காரித்துவம் | | ,, | ,, |
| பரமார்த்த குரு கதை | ... | ,, | 5 |
| ஜீவகன் சரிதை | ... | ,, | 8 |
| இலக்கணப் பாடங்கள் | ... | ,, | 5 |
| இந்திய கற்பரசிகள் | ... | ,, | 4 |
| இந்திய வீரர்கள் | ... | ,, | 10 |
| சங்கிரக இராமாயணம் | ... | ,, | 7 |
| துளசி தாசர் | ... | அச்சில் | |
| தமிழ் நாட்டுப் பெரியோர் | ... | அச்சில் | |
| கோவலன் சரிதை | ... | ,, | 10 |
| நளன் சரிதை | ... | ,, | 12 |
| நன்றியறியா மகன் | ... | ,, | 12 |

இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட்

சுங்குராம செட்டி தெரு, சென்னை



The Huxley Press, Madras